துரைத்தனத்தார் அங்கீகரித்தது

# ஆரியமத - - உபாக்கியானம்




(முதல் பாகம்)

திருநெல்வேலி ரிடையர்ட் வக்கீல்
ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள் செய்தது.




ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர்
கே. ஸி. எஸ். ஐ., ஸி. ஐ. ஈ., அவர்களின்
முகவுரையுடன் கூடியது.

17-ம் பதிப்பு

விவேக போதினி ஆபீஸ்,
மயிலாப்பூர், சென்னை.

 [அணா 8

# சித்திரப் படங்கள்

---

1. ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா காளிங்கன் என்னும் பாம்பின் மேல் நர்த்தனஞ்செய்து அதன் கர்வத்தை. அடக்கல்
2. த்ருவருக்குப் பகவான் பிரத்தியக்ஷமாதல்
3. பீஷ்மர் பிரமசரியவிரதம் பூணுதல்
4. சபரி இராமருக்கு அன்புடன் விருந்தளித்தல்
5. சீதையின் கஷ்டம்
6. கௌசிகர் தவம் வீணானது
7. சாவித்திரி யமனைச் சந்தித்தல்
8. நளன் தமயந்தியைக் காட்டில் பிரிதல்
9. தத்தாத்ரேயர்
10. இராமர் பரதரைச் சந்தித்தல்
11. மஹாபலி தன் சொல்லைக்காக்கத் தன் தலையைக் கொடுத்தல்
12. அனுமார் சுக்கிரீவனோடு ஸ்ரீராமரை சிநேகம் செய்து-வைத்துத் தமது விசுவாசத்தைக் காட்டியது
13. பகவான் குசேலரை உபசரித்தல்
14. பகீரதனால் கொண்டுவரப்பட்ட கங்கையின் கர்வம் பங்கமானது

# முகவுரை

(மொழிபெயர்ப்பு.)

தற்காலத்திய கல்வி கற்பிக்கும் முறைகளைப்பற்றி நமது நாட்டில் விசேஷ அதிருப்தி எங்கும் காணப்படுகிறது. உயர்ந்த உத்தியோகஸ்தர்கள், கற்றுத் தேர்ந்த சாதாரண ஜனங்கள், பரதகண்ட எதிர்கால நிலையைப் பற்றி விஸ்தரிப்போர், பக்ஷபாதமில்லாத அந்நியதேசத்தார் முதலிய எல்லோரும் இவ்விஷயத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்திருக்கின்றனர். இந்த முறைகளிலிருந்து உண்டாகும் நன்மைகளைப் பெரும்பாலும் அங்கீகரித்தபோதிலும், 'இதில் தருமம், மதம் இவைகளைப் பற்றிப் போதிப்பதற்கு வேண்டிய முறைகள் இல்லாதிருப்பது ஒரு பெருங்குறை' என்று எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். தருமம், மதம் இவைகளைக் கற்பிப்பது நன்மை விளைக்குமாயினும், இதனால் என்ன பலன் உண்டாகுமோ? கற்பிக்கத் தகுந்த உபாத்தியாயர்களை எவ்வாறு தேர்ந்தெடுப்பது? தகுந்த பாடப் புத்தகங்கள் எவ்வாறு அமைப்பது? என்று இவர்கள் சங்கிக்கின்றனர். எப்படியிருந்தபோதிலும், தருமம் அல்லது மதவிஷயங்களைத் சரிவரப் போதிப்பதற்கு நமது புராணம் முதலிய பழைய நூல்களை உபயோகப்படுத்துவது அவசியமென்ற விஷயத்தில் அபிப்பிராயபேதமே இல்லை. இந்த நூல்களில் காணப்படும் குணநிதிகளான மகான்கள் இக்காலத்தவர்களது நோக்கம் எண்ணங்கள் முதலியவைகளைச் சீர்திருத்தி மேன்மைப்படுத்தும் திறனுடையவர்கள். இவர்கள் விஷயங்கள்தாம் நம்மவர்கள் எல்லோருக்கும் பொதுவாக உள்ளன. இதை முன்னிட்டுக்கொண்டு இக்காலத்தில் தரும மதவிஷய போதனைக்கு வேண்டிய பாடப்புத்தகங்கள் இல்லாதிருக்கும் குறையை நீக்க எல்லோரும் முயற்சிக்கின்ற

னர். இம்மாதிரியான முயற்சிகளுள் ம-ா-ா-ஸ்ரீ திருநெல்வேலி எ. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள் வெளியிட்டிருக்கும் ஆரியமத உபாக்கியானம் ஒன்று.

இப்புத்தகம் மூன்று பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது. முதலாவது, குடும்பக் கடமைகளைப் பற்றியும்; இரண்டாவது, தரும விஷயங்களைப்பற்றியும்; மூன்றாவது, அதரும விஷயங்களைப்பற்றியும் விளக்குவது. விஷயங்கள் நன்றாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை விளக்க எடுத்துள்ள கதைகள் நமது புராணங்களில் உள்ளனவாயும், சாதாரணமாக வழங்கிவருவனவாயும் இருக்கின்றன. முதற் பிரிவில் இந்த ஆசிரியர் புத்திரர் கடமை, மனைவியின் கடமை, சிஷ்யன் கடமை, சகோதரர் கடமை இவைகளை விவகரிக்கிறார். இரண்டாம் பிரிவில் நேர்மை, உண்மை, அன்பு. பக்ஷபாதமின்மை, நியாயம், பொறுமை, காருண்யம், விடாமுயற்சி, நன்றியறிவு, ஸத்ஸங்கம் முதலிய தருமங்கள் விளக்கப்படுகின்றன. மூன்றாம் பிரிவில், கோபம், கர்வம், ஆசை, குடி, பிடிவாதம், துச்சங்கம் முதலிய அதருமங்களால் விளையும் தீங்குகள் எடுத்துக்காட்டப்படுகின்றன. இவைகளைப் பற்றிய கதைகள், சிறுவர்கள் மனத்திலும் பதியும்படியாக எளிய சாதாரண நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. இவைகள் ஒருவேளை வெகு சுருக்கமாகவிருப்பதாகக் காணப்படலாம். ஆனால், தேர்ந்த உபாத்தியாயர் இவைகளில் சேர்க்கவேண்டிய பாகங்களைச் சேர்த்துத் தமது வகுப்பிற்குத் தகுந்தபடி எளிதில் இவைகளை விஸ்தாரப்படுத்திக்கொள்ளலாம்.

நமது பாடசாலைகளில் கீழ்வகுப்புகளுக்குத் தகுந்தபடி இப்புத்தகம் நன்றாய் அமைக்கப்பட்டிருக்கிறது. ம-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள் இப்புத்தகத்தின் மூலமாக நம் நாட்டிற்கு உள்ளபடி உதவி புரிந்திருக்கின்றனர்.

பி. எஸ். சிவஸ்வாமி ஐயர்.

# INTRODUCTION

---

(*Original.*)

Signs are observable throughout the country of considerable discontent with the existing system of school education. It has been the subject of criticism from all quarters. It has been examined by high placed officials, by the educated middle classes, by the exponents of New India and by disinterested foreigners. While acknowledging more or less fully the advantages derived by the country from the present system of education, most critics seem to concur in the opinion that it is one of the weak points in our educational system that it makes no conscious effort for the provision of moral and religious education. There are some who, while conceding the desirability of such education, are sceptical of the results of any direct efforts towards that end and of the possibility of finding the requisite personnel of teaching and of devising suitable text-books. The opinion is however unanimous that any attempt to impart moral or religious instruction must, to be successful, utilize the resources of *the ancient literature* and the living ideals embodied therein which to this day exercise a profound influence over the minds of the

people and colour their thoughts, sentiments and aspirations and form a bond of union between the people. Attempts are now being made to supply the want of suitable text-books and the "*Aryamatha Upakhyanam*" is one of several books which have been brought out by Mr. A. Krishnaswami Aiyar of Tinnevelly with this object.

The book is divided into three parts, the first dealing with *family duties*, the second dealing with *virtues* and the third with *vices*. *The topics are well-chosen* and the stories in illustration of the principle are all well-known and taken from the sacred books. In the first part, the author deals with filial duties and the duties of wives to their husbands, of pupils to their preceptors and of brothers to each other. In the second part, he deals with virtues like rectitude, veracity, kindness, impartiality, justice, patience, compassion, perseverance, gratitude, good association etc. In the third part, he deals with the evils of anger, pride, greed, drink, mendacity and bad association etc. *The stories are such as to appeal to all boys and are told in an easy popular style.* They are perhaps a little too short, but a knowing teacher can easily fill in the details and expand the story according to the requirements of his class.

*The work is very well adapted for the lower forms of our Schools* and Mr. Krishnaswami Aiyar has done a service to the country in bringing out this book.

P. S. SIVASWAMY AIYAR.

# பொருளடக்கம்

## 1. குடும்பக் கடமைகள்

## II. தரும விஷயம்

## III. அதரும விஷயம்



துருவருக்குப் பகவான் பிரத்தியக்ஷமாதல்
—47–ம் பக்கம் பார்க்க.



# ஆரியமத உபாக்கியானம்

## முதல் பாகம்

## 1. குடும்பக் கடமைகள்

### 1 புத்திரர் கடமை (1)

முற்காலத்தில் அயோத்தியா நகரத்தில் தசரதர் என்று புகழ்பெற்ற ஓர் அரசர் இருந்தார். ஒருசமயம் யுத்த பூமியில் அவருக்கு ஆபத்து நேரிட்டபொழுது அவரது மனைவி கைகேயி என்பவள் அவருக்கு மிகுந்த சகாயம் செய்து உயிர் தப்புவித்தாள். அதற்குப் பதிலாகத் தசரதர், அவள் கேட்கும்போது இரண்டு வரங்களைக் கொடுப்பதாக வாக்களித்திருந்தார். அப்பொழுது வரங்கள் இப்படிப்பட்டவை எனக் குறிக்கப்படவில்லை. பின்பொரு காலத்தில் அவரது முதல் மனைவியாகிய கௌசலைக்குப் பிறந்த மூத்த குமாரரான ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் செய்யும் தருணத்தில், கைகேயி தனக்கு வாக்களித்த இரண்டு வரங்களையும் கொடுக்கவேண்டும் என்று அரசனைக்

கட்டாயப்படுத்தினள். அவ்விரண்டு வரங்களுள் ஸ்ரீ ராமருக்குப் பதிலாகத் தனது குமாரனாகிய பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டும் என்பது ஒன்று; பதினான்கு வருஷம் ஸ்ரீராமர் வனவாஸம் செய்யவேண்டும் என்பது மற்றொன்று. இவ்விரண்டு கொடிய வரங்களையும் கேட்டவுடனே, மஹாராஜா தயங்கிப் பூமியில் வீழ்ந்தார். கைகேயியின் மூலமாகவே தம் தகப்பன் மூர்ச்சை அடைந்தார் என்று அறிந்து கொண்ட ஸ்ரீராமர், பட்டாபிஷேகத்திற்குரிய உடைகளை எறிந்துவிட்டு, ரிஷிவேஷம் பூண்டு, தம்முடைய தாய்மார்கள், பரிவாரஜனங்கள் முதலியோர் வேண்டுகோளையும் கவனிக்காமல் வனத்துக்குச் சென்றார். குறிப்பிட்ட காலம் வனத்தில் வசித்து, தம் பிதாவினால் செய்யப்பட்ட வாக்குத்தத்தத்தை நிறைவேற்றி வைத்தார். ஸ்ரீராமரது புகழ் இன்றைக்கும் அழியாமல் நிலைநிற்கிறது.

பெற்றோர்களைப் பெருமைப்படுத்தல் புத்திரர் கடமை

—இராமாயணம், அயோத்தியா காண்டம்.

---

## 2. புத்திரர் கடமை (2)

பரத வம்சத்தில் யயாதி என்று ஓர் அரசர் இருந்தார். அவருக்குப் பல பிள்ளைகளுண்டு. அவர்களுள் மூத்தபிள்ளைக்கு யது என்று பெயர். இளையவனுக்குப் பூரு என்று பெயர். ஒருகாலத்தில் யயாதி தம் மாமனாகிய சுக்ராசாரியர் ஏற்படுத்திய ஒழுங்கை மீறி நடந்தபடியால், அவர் யயாதியை, 'இப்பொழுதே உனக்குக் கிழத்தனம் நேரிடக்கடவது' என்று சபித்தார். உடனே

யயாதிக்கு விருத்தாப்பியம் வந்துவிட்டது. அவர் மிகவும் வணக்கத்துடன் சுக்ராசாரியருக்குப் பணிவிடை செய்து அவரைச் சந்தோஷப்படுத்த, அவர், "இந்தக் கிழத்தனம் உனக்கு இருந்தே தீரும். அப்படி இருந்தாலும், அதை நீ ஒரு வாலிபனிடம் கொடுத்துவிட்டு, அவனது வாலிபத்தைப் பெறக்கூடிய சக்தி உனக்கு வரக்கடவது" என்று அனுக்கிரகித்தார். இவ்வாறு சொல்லிச் சுக்ராசாரியர் தமது இருப்பிடம் சென்றார். யயாதியும் தம் பிள்ளைகளில் ஒவ்வொருவரையும் அழைத்துத் தம் கிழத்தனத்தை வாங்கிக்கொண்டு, அவர்களது வாலிபத்தைக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார். யது முதலிய மூத்தபிள்ளைகள் மறுத்து விட்டார்கள். கடைசிப் புத்திரனாகிய பூரு மட்டும் அவ்வாறு செய்யாமல், தகப்பன் இஷ்டப்படி தனது யௌவனத்தைக் கொடுத்துக் கிழத்தனத்தை வாங்கிக் கொண்டான். இதனால் யயாதிக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. முடிவில் அவர் தமது இராஜ்யத்தை விட்டுத் தபஸுக்குச் செல்லுங்காலத்தில், பூருவுக்கே அரசைக் கொடுத்துவிட்டுச் சென்றார்.

**பெற்றோரை மகிழ்விப்பது புத்திரர் கடமை.**

—மஹாபாரதம், ஆதி பர்வம்.

---

## 3. புத்திரர் கடமை (3)

முன்னொரு காலத்தில் ஜமதக்னி என்று ஒரு முனிவர் இருந்தார். அவருக்கு மூன்று பிள்ளைகள் உண்டு; இளையவருக்குப் **பரசுராமன்** என்று பெயர். பரசுராமருடைய தாயார் ஒரு சமயம் மனத்தில் மாறுபாட்டை அடைந்து, ஹோமத்திற்கு வேண்டிய தீர்த்

தத்தைத் தகுந்தவேளையில் கொண்டுவராமல் இருந்து விட்டாள். அவள் நிலைமை உணர்ந்த ஜமதக்னி அவளைக் கொன்றுவிடும்படி தமது பிள்ளைகளுக்கு உத்தரவு செய்தார். முதல் இரண்டு பிள்ளைகளும், தாயாரைக் கொல்வது தகாது என்று சும்மா இருந்துவிட்டார்கள். ஜமதக்னி பரசுராமனை நோக்கி, "உன் தாயையும் தமையன்மார்களையும் உடனே கொன்றுவிட்டு வா" என்று அதிக கோபத்துடன் கூறினர். தகப்பன் உத்தரவைத் தலைமேற்கொண்டு அவர் அவ்வாறே செய்து விட்டுத் தகப்பனர் அருகில்வந்தார். அவர் மிகுந்த சந்தோஷங்கொண்டு, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். "என் தாயும் தமையன்மார்களும் பிழைத்து எழுந்திருக்கவேண்டும். அவர்கள் செய்த குற்றங்களும், என்னல் அவர்கள் இறந்தார்கள் என்பதும் அவர்களுக்கு ஞாபகம் வாராதிருக்கவேண்டும்" என்று பரசுராமர் கேட்டுக்கொள்ள ஜமதக்னி தம் பிள்ளையின் வேண்டுகோளைத் தமது தபோபலத்தால் செய்துமுடித்தார்.

**பெற்றோருக்குப் பணிந்துநடத்தல் புத்திரர் கடமை**

**—பாகவதம், 9-வது ஸ்கந்தம்.**

---

## 4. புத்திரர் கடமை (4)

மிதிலாபுரியில், ஜனகமஹாராஜன் அரசாட்சி செய்துவருங்காலத்தில், கசாப்புக் கடைக்காரன் ஒருவன் இருந்தான். அவன் மிகவும் தெய்வபக்தி யுடையவன். அவனுடைய தாய்தந்தையர் வயதுசென்றவர்களாய் இருந்தார்கள். அவன் நாள்தோறும் அதிகாலையில் எழுந்து, பெற்றோருக்குச் செய்யவேண்டிய

பணிவிடைகளைச் செய்து, அவர்களைத் திருப்திசெய்து விட்டுத் தன் தொழிலை விடாது நடத்தி, ஜீவனம் செய்துவந்தான். இப்படி அவன் வெகுகாலமாய்ப் பெற்றோரைப் பேணுதலில் சிரத்தை வைத்தும், தன்னுடைய தொழிலாகிய கசாப்புக்கடை வியாபாரத்தை ஒழுங்குபெற நடத்தியும் வந்தமையால், அவன் சிறந்த ஞானியாகி, தர்மவியாதன் என்று எல்லோராலும் கொண்டாடப்பட்டான்.

இவனிடம் கௌசிகன் என்ற ஒரு பிரமசாரி வந்தான். அவன் தவஞ்செய்து மிகுந்த கர்வமடைந்தவன். அவனை ஒரு குலஸ்திரீ கர்வபங்கம் பண்ணி, அறிவூட்டக் கருதி, தர்மவியாதனிடம் போகும்படி அனுப்பினாள். இக் குலஸ்திரீ கணவனுக்குப் பணிவிடை செய்தல், அதிதிபோஜனம் செய்வித்தல் முதலிய தர்மகுணங்களால் மிகுந்த பிரமஞானத்தை அடைந்திருந்தாள்.

பிரமசாரி வந்ததும், தர்மவியாதன் ஞான திருஷ்டியால் அவனது விருத்தாந்தங்களை அறிந்து கொண்டு, அவனை ஒருபக்கத்தில் உட்காரச் செய்தான். தன் வேலை முடிந்ததும், அவன் பிரமசாரியைத் தன் வீட்டுக்குவரும்படி அழைத்துவிட்டு, முதலில்சென்று தன் தாய்தந்தையரிடம் போய் அவர்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளை யெல்லாம் செய்து முடித்தான். பின்னர் பிரமசாரியை நோக்கித் தன் தர்மானுஷ்டானமாகிய பெற்றோரைப் பேணுதலை எடுத்துக் கூறி, அதனால் தனக்கு உண்டான சிறப்பையும் காட்டி, வேறு எவ்விதத்திலும் இம்மாதிரிச் சிறப்பு உண்டாவது அரிது என்றும் நிரூபித்துத் தன் தாய்

தந்தையர்களையும் கௌசிகனுக்குக் காட்டினான். உடனே பிரமசாரி வெட்கமுற்று, தான் காப்பாற்றாது விட்டுவிட்டு வந்த தன் முதியபெற்றோரை இரக்ஷிக்கச் சென்றான். ஔவையார் கூறிய **தந்தைதாய்ப் பேண்** என்ற முதுமொழியை மறந்துவிட்ட கௌசிகன், தர்மவியாதனால் அதை மறுபடியும் கற்றுக் கொண்டான்.

**பெற்றோரைப் பேணுதல் புத்திரர் கடமை.**

**—மஹாபாரதம், ஆரணிய பர்வம்.**

---

## 5. புத்திரர் கடமை (5)

**சத்தியவதி** என்று ஒரு கன்னிகை இருந்தாள். அவளைச் **சந்தனு** என்ற ஓர் அரசர் மணம்புரிய ஆசை கொண்டார். தம் விருப்பத்தை அவ்வரசர் அக்கன்னிகையின் பிதாவுக்கு அறிவிக்க, அவன் அரசரை நோக்கி "அரசே! உமக்குக் காங்கேயன் என்ற ஒரு புத்திரன் இருக்கின்றானே, அவன் அல்லவா இராஜ்யத்திற்கு உரிமை பூண்டவன்? என் பெண்வயிற்றுப் பிள்ளைக்குப் பட்டம் ஏது? நீர் சத்தியவதி வயிற்றில் பிறக்கும் புத்திரனுக்கு அரசுரிமை கொடுப்பீரானால், உமக்கு அவளை மணம் புரிவிப்பதில் ஆக்ஷேபமில்லை" என்றான். சந்தனுவுக்குக் காங்கேயனைப் பட்டத்துரிமையினின்றும் விலக்க மனமில்லை; சத்தியவதியின் ஞாபகத்தை மறக்கவும் முடியவில்லை. இதை அறிந்து கொண்ட அக்கன்னிகையின் பிதா, அவ்வரசனுக்குத் தன் பெண்ணைக் கொடுக்கமாட்டேன் என்று மறுத்துவிட்டான். அதனால் அவ்வரசர் மிகவும் துக்கப்பட்டுக்கொண்டு தம் அரண்மனையிலேயே இருந்தார். தர்மாத்மாவான காங்

கேயர் இதை இரகசியமாக அறிந்துகொண்டு, சத்திய வதியின் பிதாவிடம் சென்று, அரசுரிமையைத் தாம் ஏற்பதில்லை என்பதாகவும், அப்பெண் வயிற்றில் பிறக்கும் பிள்ளைகளுக்கே அதைக் கொடுப்பதாகவும் வாக்களித்தார். காங்கேயர் இராஜ்யத்தை விரும்பாவிட்டாலும், அவரது பிள்ளைகளாகிலும் பேரப்பிள்ளைகளாகிலும் அரசுரிமையை இச்சிக்கக்கூடும் என்று எண்ணிய சத்தியவதியின் பிதா, அவர் சொன்ன சொல்லை ஒப்புக்கொள்ளவில்லை. அதன்பிறகு காங்கேயர், தாம் கலியாணமே செய்துகொள்ளுவதில்லை என்று ஒரு கொடிய சபதத்தைச் செய்தார். அச்சபதத்தின்படியே அவர் பிரமசரிய விரதம் பூண்டமையால் **பீஷ்மர்** என்ற பெயர் பெற்றுர். இதை அறிந்த அவர் பிதா சந்தோஷித்து, அவருக்கு **ஸ்வச்சந்த மரண சக்தி** (இஷ்டப்பட்டால் மரணத்தை அணுகவிடவும், இல்லாவிட்டால் அதைத் தடுத்துவிடவும் கூடிய சக்தி) யைக் கொடுத்தார். இவ்வரனைப் பெற்றும், உறுதியான பிரமசரியத்தை அனுஷ்டித்தும், பீஷ்மர் சிறந்த மஹானுகி விளங்கினுர்.

**அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்**

**—மஹாபாரதம், ஆதி பர்வம்.**

---

## 6. விருந்திடல்

**கௌரவர்களுக்கு** அரசனுன **துரியோதனன்** பெருஞ் செல்வமுடையவனுக இருந்தான். அவனிருந்த அஸ்தினபுரியிலேயே **விதுரர்** என்ற ஒரு ஞானி இருந்தார். அவருக்குப் பாண்டவர்களிடம் அந்தரங்கத்தில் பிரீதியிருந்தாலும், துரியோதனனைப் பகைத்

துக் கொள்ளாமல் அவனைத் தன்னால் இயன்றமட்டும் சீர்திருத்த முயன்றார். பாண்டவர்களுக்காக ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அஸ்தினாபுரத்திற்குத் தூதுவந்த காலத்தில், துரியோதனன் அவரைத் தன் வீட்டில் விருந்துக்கு அழைத்தான். அவன் விருந்திட்டுப் பகவானைத் தன் வசப்படுத்தவேண்டும் என்கிற தீய எண்ணங்கொண்டிருந்தான். எல்லாம் உணர்ந்த பகவான், இக்குறிப்பை அறிந்து, அவனது அழைப்பை அங்கிகரியாமல், விதுரர் வாய்திறந்து, "விருந்துண்ண எழுந்தருள வேண்டும்" என்று அழைக்கும் முன்னமே, மிகுந்த சந்தோஷத்துடன் ஒப்புக்கொண்டு, "விதுரன் ஒருவனே இந்த அஸ்தினாபுரியில் யாதொரு பக்ஷபாதமும் காட்டாத பரிசுத்தன்" என்று புகழ்ந்து கூறினார். விதுரர் இட்டவிருந்து, மிகுந்த ஆடம்பரமற்றதாய் இருந்தபோதிலும், அது, அன்பு பக்ஷபாதமின்மை முதலிய நற்குணங்கள் உள்ளவரிடமிருந்து கிடைத்தபடியால், பகவான் அதை உண்டு அடைந்த திருப்திக்கு அளவேயில்லை.

இம்மாதிரியாகவே ஸ்ரீராமபிரான் சீதையைத் தேடிக்கொண்டு, மிகுந்த துக்கத்துடன் காட்டில் அலைந்துவருகையில், வேடஸ்திரீயாகிய சபரி என்பவள் மிகவும் விருப்பத்துடன் சில ருசியுள்ள பழங்களைக் கொடுக்க, அவர் அவைகளைப் புசித்துத் திருப்தியடைந்தார். பிறகு அச் சபரிக்கு மோக்ஷத்தையும் அளித்தார்.

**விருந்துக்கு அழகு விருப்புடன் அளித்தல்.**

—மஹாபாரதம், உத்தியோக பர்வம்.

—இராமாயணம், ஆரணிய காண்டம்.

# 7. மனைவியின் கடமை (1)

நளமகாராஜனுக்கு நளாயினி என்று ஒரு பெண் இருந்தாள். அவளைத் தமக்கு மணம்புரிவிக்கவேண்டுமென்று மௌத்கல்யர் என்னும் ஒரு கிழமுனிவர் அரசரிடம் வந்து யாசித்தார். அரசர் அதற்கு, "என் பெண் இஷ்டப்பட்டால், அப்படியே செய்கிறேன்" என்றார். முனியும், நளாயினியிடம் மிகுந்த அழகிய உருவங்கொண்டு செல்ல, அவள் அவரை மணக்கச் சம்மதித்து, தன் சம்மதக்குறியாக ஒரு மோதிரத்தையும் கொடுத்தாள். முனிவர் அதைப் பெற்றுக்கொண்டு, வழியில் தம் உருவத்தை மாற்றி அரசரிடம் வந்தார். அரசர் தம் பெண்ணை அழைத்துவிசாரிக்க, அவள் தன்னிடம் மோதிரம் வாங்கியவர் இவர் அல்லவென்று சொல்ல முதலில் யத்தனித்தாள். ஆனபோதிலும், அதை அடக்கிக்கொண்டு, முனிவரை மகான என்று கருதி, அவருக்கு மனையாளாக உடன்பட்டு, அவரைப் பின்தொடர்ந்து காட்டிற்குச் சென்றாள். அவர் அங்கே வெகுகாலம் தவத்தில் இருந்தார். இப்படியிருக்கையில் நளாயினி அவருக்குச் சிறிதும் சலிப்பின்றித் தொண்டுகள் செய்துவந்தாள். மௌத்கல்யர் தவத்திலிருந்து எழுந்ததும், நளாயினியின் கற்பைப் பரிசோதிக்க வேண்டி, தமது தேகத்தில் பெருவியாதியை வருவித்துக் கொண்டார். அதனால் அவர் அங்கமெல்லாம் குறைந்து அழுகிச் சொட்டிக் கொண்டிருந்தது. இதில் சிறிதும் வெறுப்புறாத நளாயினி, கணவனைக் கடவுள் என மதித்து, அவர் இஷ்டப்படி அவரை ஒரு கூடையில் வைத்துக்கொண்டு, அநேக திவ்யதீர்த்தங்களுக்குப்போய் அவரை ஸ்நானம் செய்வித்துவந்தாள்.

இப்படித் தீர்த்தயாத்திரைபோகுங்கால், அவள் கற்பை முற்றிலும் பரிசோதிக்க, முனிவர் ஒரு தாசியின்மேல் மோகங்கொண்டதாக நடித்தார். இதனாலும் நளாயினி மனம் கோணாது, அவரிஷ்டப்படி அத்தாசியை அவருடன் சேர்ப்பித்து, அவருக்கு முன்போலவே உபசாரங்கள் செய்துவந்தாள். பின்பு ஒருகால் இவள் அவரைச் சுமந்துகொண்டு போகும்வழியில், கழுவேற்றப் பட்ட **ஆணிமாண்டவ்யரின்** கால், இவள் தலைக்கூடையிற்பட அவருக்கு மிகுந்த வலி உண்டாயிற்று. அப்பொழுது மாண்டவ்யர், "இன்று சூரியோதயமானதும் நீ மங்கிலியம் இழக்கக்கடவாய்" என்று சபிக்க, நளாயினி மௌத்கல்யரின் பிரிவைச் சகியாதவளாய், "சூரியோதயம் ஆகாதிருக்கக்கடவது" என்று பிரதிசாபம் கூறினாள். இதனால், எட்டுநாள் சூரியன் உதியாமலே யிருக்க, உலகத்தார் வெகு துன்பமடையும்படி நேரிட்டது. தேவர்களின் வேண்டுகோளால் மாண்டவ்ய ரிஷி தம் சாபத்தை மாற்ற, நளாயினியும் தன் சாபத்தை நிவர்த்திக்க இடங்கொடுத்தாள். உடனே மௌத்கல்யர் தன் விகார ரூபத்தை மாற்றிவிட்டுச் சுந்தரரூபங்கொண்டு, நளாயினி மிகவும் களிப்புறும்படி அன்றுமுதல் நடந்துகொண்டார்.

குலமகட்குத் தெய்வங் கொழுநனே.

—தமிழ்ப் பாரதம், ஆதி பர்வம்.

---

## 8. மனைவியின் கடமை (2)

மத்திர தேசத்தில் **அசுவபதி** என்ற ஓர் அரசர் இருந்தார். அவருக்குச் சரஸ்வதியின் அநுக்கிரகத்தால் **சாவித்திரி** என்று ஒரு பெண் பிறந்தாள். அவளுக்குத்

தகுந்த பருவம் வந்தது. அவள் தகப்பன், "ஓ! சத்திய வதி! நீ உனக்கிஷ்டமுள்ள மணவாளனை வரித்து மணஞ் செய்துகொள்ளலாம்" என்று சில பரிவாரங்களுடன் அவளை அனுப்பினார். அவள் பல தேசங்களுக்கும் சென்று திரும்பிவந்து, "அப்பா! இராஜ்யத்தை இழந்தும், கண்களுமில்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டு காட்டில் வசிக்கும் **த்யுமத்ஸேநர்** என்னும் அரசரது புத்திரராகிய **சத்தியவானிடத்தே** என் மனம் ஈடுபட்டது" என்று கூறினாள். அப்பொழுது அச்சபையில் வந்திருந்த நாரதர் "ஆகா! சத்தியவான் அல்ப ஆயுளுடையவனாயிற்றே! நீ வேறு நாயகனைத் தேடிக்கொள்ளக் கூடாதா?" என்று கேட்டார். சாவித்திரியின் மனம் சத்தியவானிடத்திலேயே உறுதியாக இருந்ததுகண்டு, நாரதர் விவாகத்துக்கு உத்தரவுகொடுத்து மறைந்தார். அவ்விருவருக்கும் சீக்கிரத்தில் விவாகமும் நடந்தேறிற்று. சாவித்திரி சத்தியவானுடன் சேர்ந்து தன் மாமனார் இருந்த காட்டில் வசித்துவருகையில், அவள் கணவனுக்கு முடிவுநாள் அணுகிவிட்டது. அதற்கு நெடுநாள் முதற்கொண்டே சாவித்திரி மாங்கல்ய நோன்பு முதலிய விரதங்களை அனுஷ்டித்து மஹா சுத்தையாயிருந்தாள். சத்தியவானது மரண தினத்தின் மாலை, அவன் வழக்கம்போலவே சமித்து வெட்டக் காட்டிற்குப் புறப்பட்டான். சாவித்திரி தன் மாமனார் முதலியவர்களின் அனுமதிபெற்று, அவனைத் தொடர்ந்தாள். இருவரும் காட்டிற்குச் சென்றார்கள். கொஞ்சநாழிகை வரையில் சத்தியவான் வேலைசெய்தான். பின்னர் அவனுக்கு ஒருமாதிரியான தலைவலி உண்டாயிற்று. அவன் சாவித்திரியின் மடியில் தலைவைத்துப் படுத்துக்

கொண்டு கண்களை மூடிக்கொண்டான். கொஞ்ச நாழிகைக்கெல்லாம் கறுத்த மேனியும் சிவந்த கண்ணும் உடையவனும், பாசக்கயிற்றைக் கையில் ஏந்தி, ஒரு புருஷன் சாவித்திரியின் எதிரில் தோன்றினன். அவள் மெதுவாக எழுந்து அவனுக்கு வந்தனம் செய்தாள். அவன் தான் யமன் என்றும், சத்தியவான் உயிரைக் கவர்ந்துகொண்டுபோக வந்தவன் என்றும் கூறி, அப்போது துக்கித்த சாவித்திரியைப் பலவிதமாகத் தேற்றி, வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டு, சத்தியவான் உயிரை எடுத்துக்கொண்டு, தன் பட்டணம் நோக்கிப் புறப்பட்டான். சாவித்திரியோ யமனை விடாது பின்தொடர்ந்தாள். அவளது கற்புடைமையைக் கண்டு யமன் மகிழ்ந்து, "உன் கணவன் உயிரைத் தவிர வேறு எதை வேண்டுமானாலும் கேட்டுக்கொள்" என்று அனுமதி கொடுத்தான். அதற்கு அவள் தன் மாமனர் முதலியவருக்குக் கண், இராஜ்யம் முதலிய பூர்வ நிலைமை வரவேண்டும் என்று கேட்டு, யமன் மூலமாக அவைகளைப் பெற்றுக்கொண்டாள். இவைகளை அடைந்தபோதிலும், அவள் யமனை விடாது பின்தொடர்ந்து, வெகு தந்திரமாக வார்த்தையாடி, முடிவில் தனக்கு அநேகம் பிள்ளைகள் சத்தியவானிடம் உண்டாகவேண்டும் என்ற வரத்தையும் கேட்டுப் பெற்றுக்கொண்டாள். அதன் பின்பு அவள் தன் கணவன் உயிரை யாசிக்க, யமன் தான் ஏமாந்ததைக் கண்டு விசனித்தும், சாவித்திரியின் கற்பையும் புத்திக்கூர்மையையும் கண்டு வியந்தும், சத்தியவானது உயிரைக் கொடுத்துவிட்டான். உடனே சாவித்திரி யமனுக்கு மிகுந்த மரியாதைகள்

செய்து அவனிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு தன் புருஷனுடைய சரீரம் கிடக்கும் இடம் வந்து, அவ்வுடலின் தலையைத் தன் மடிமீது ஏற்றி வைத்துக் கொண்டாள். உடனே சத்தியவான் விழித்துக்கொள்ள, அவனை மெதுவாக நடத்திக் கொண்டு ஆசிரமம் வந்து சேர்ந்தாள். அங்கிருந்த ரிஷிகள் எல்லோரும் சாவித்திரியின் அற்புதச் செயலையும், அவள் மாமனார் முதலியோருக்கு வந்த சிறப்பையும் ஞானக்கண்ணினுல் உணர்ந்து, அவளைப் பலவாருகப் புகழ்ந்து பேசினர். இவ்விருத்தாந்தம் மாசியும் பங்குனியும் கலக்கும் நாளில் நடந்தது. இதன் ஞாபகார்த்தமாகவே, காரடையா நோம்பு என்னும் விரதம் வழங்கி வருகிறது. சாவித்திரியின் சிறப்பைக் கொண்டாடி இப்பொழுதும் ஸ்திரீகள் இந்த நோன்பை அனுஷ்டித்து வருகிருர்கள்.

கற்பெனப்படுவது கணவரைப் பேணுதல்

—மஹாபாரதம், ஆரணிய பர்வம்.

---

## 9. மனைவியின் கடமை (3)

நிடத தேசத்தில் நளன் என்று ஓர் அரசன் இருந்தான். அவனது அழகை ஓர் அன்னப்பட்சி மூலமாகக் கேள்வியுற்ற தமயந்தி என்னும் விதர்ப்பராஜன் மகள், நளனையே கணவனாக அடையவேண்டுமென்று தன் மனதில் நிச்சயித்திருந்தாள். பிறகு அவள் தகப்பன் அவளுக்கு சுயம்வரம் ஏற்படுத்தினான். அதற்கு முற்கூறிய அன்னப்பறவை மூலமாகவே தமயந்தியை மணக்கக் கருதிய நளனும் வந்தான். வரும் வழியில் அவனை நான்கு தேவர்கள் சந்தித்தார்கள். அவர்கள் தமயந்தியை மணந்து கொள்ள விரும்பி, அவ்விஷயத்

தை அவளுக்கு அறிவிக்கும்படி நளனையே தூது அனுப்பினர். நளன் தமயந்தியினிடத்தில் அதிக ஆசை கொண்டிருந்தபோதிலும், அவளைக் கண்டவுடன் தன் மன நிலைமையைச் சிறிதும் காட்டாது, தமயந்தியிடம் தேவர்களின் மகிமையை ஒளியாது எடுத்துரைத்து, அவளை அத்தேவர் நால்வருள் எவரையாவது மணஞ் செய்துகொள்ளும்படிப் பலவாறு தூண்டினான். நளன் என்ன சொல்லியும், தமயந்தி ஒரே உறுதியாக, "உன்னையன்றி வேறு எவரையும் கனவிலும் கணவனாக நினைக்கமாட்டேன்" என்று கூறிவிட்டனள். அதை அவன் தேவர்களிடம் கூறிவிட்டு, அவர்களோடு சுயம்வரமண்டபத்திற்கு வந்தான். அதில் தமயந்தி நளனுக்கே மாலையிட்டாள். அன்றுமுதல், நளனைவிட்டு அவள் பிரியவேயில்லை. பின்னர் சநீசுவரனது சூழ்ச்சியால், நளன் வனத்துக்குப் புறப்படும்படி நேர்ந்தது. புறப்படும்பொழுது, அவன் தன் மனைவியை நோக்கி, "நங்காய்! எனக்கு இப்பொழுது நல்ல காலமில்லை. நான் மறுபடியும் இராஜ்யம் அடைந்தபிறகு, உன்னை அழைத்துவருகிறேன். அதுவரையில் நீ உன் பிறந்தகத்திற்குப் போயிரு" என்று சொன்னான். அவள் கேட்காது, சீதையைப்போல் கணவனைப் பின்தொடர்ந்தாள். காட்டில் பலவிதக் கஷ்டங்கள் சம்பவித்தும், அவள் கணவனைவிட்டுப் பிரியவில்லை. தனது தந்தை நாடுசேர்ந்து அவள் சுகமுற வேண்டுமென்னுங் கருத்தால், நளன் அவளைக் காட்டில் தனியே விட்டுப்போன பொழுது அவள், மிகுந்த கஷ்டப்பட்டுத் தன் தகப்பன் வீடு வந்துசேர்ந்தாள். அப்படிச் சேர்ந்தும், நல்ல சுகங்களை அனுபவியாது, "என் கணவன் காட்டில் எப்படி

யிருப்பாரோ! ஐயோ!" என்று துக்கித்தவளாய் தானும் கஷ்டஜீவனம் செய்துகொண்டு, ஒருக்ஷணத்தை ஒரு யுகமாகக் கழித்துவந்தாள். இத்துடன் நில்லாமல், இவள் வெகு பிரயாசைப்பட்டுத் தன் கணவனிருக்கும் இடத்தைத்தேடி அறிந்து, வெகு தந்திரமாக அவனைத் தன் தகப்பனுரது ஊர் வந்துசேரும்படி செய்தாள். கணவன் வந்து சேர்ந்ததும், அவனைச் சந்தித்து, அவனிடம் தான் பட்ட கஷ்டங்களையெல்லாம் உரைத்தாள். பிறகு அவ்விருவரும் பிரிவினுல் பட்ட துயர் தீரச் சிலநாள் விதர்ப்பநாட்டில் வசித்திருந்து, கடைசியில் தம் சொந்தநாடு சென்று, அங்கிருந்த வேற்றரசனை வென்று, முன்போலவே சுகமாக வாழ்ந்திருந்தனர்.

**கணவன் சுகதுக்கங்களைக் கருதுவதே மனைவியின் கடமை.**

—மஹாபாரதம், ஆரணிய பர்வம்.

---

## 10. மனைவியின் கடமை (4)

அயோத்தியாபுரியின் அரசனுகிய தசரதரது மூத்த திருக்குமாரரான ஸ்ரீராமர் வனஞ் செல்லப் புறப்படுகையில், அவர் பத்தினி சீதை அவரைப்பிரிந்து தனித்திருக்கச் சகியாதவளாய், அவரைப் பின் தொடர்ந்து சென்றுள். காட்டில் இராமர் பட்டகஷ்டங்களையெல்லாம் இவளும் பொறுமையான மனத்துடன் சகித்துக்கொண்டு இராமருக்குத் தன்னுல் இயன்றமட்டும் பணிவிடைகள் செய்தாள். இப்படியிருக்கையில், இலங்கைக்கு அரசனுகிய இராவணன் அவளை வெகு தந்திரமாகத் தூக்கிச் சென்று, தன் அசோகவனத்

தில் சிறைப்படுத்தினன். சீதையோ பெருந்துயரமடைந்து, தன் கணவனையே தியானஞ் செய்துகொண்டு தன்னைச் சுற்றிலுமிருந்த இராக்ஷஸிகளால் உண்டாகும் துன்பங்களையும் கவனியாது இருந்தனள். அவளை அடையவேண்டுமென்று எவ்வளவோ முயன்று, தன் சிறப்பை அதிகமாக எடுத்து அடிக்கடிகூறிய இராவணனை அவள் ஒரு துரும்பாகக்கூட மதிக்கவில்லை. அவள் இருந்த விடத்தில் அவளுக்குண்டான கஷ்டங்களுக்கு அளவேயில்லை. அவளோ எல்லாவற்றையும் சகித்துக்கொண்டு, தன் கணவன் வந்து தன்னை மீட்டுச் செல்வார் என்னும் உறுதியான நம்பிக்கையுடன் பிராணத்தியாகஞ் செய்துகொள்ளாமல் இருந்தாள். பின்னர், ஸ்ரீராமபிரான் வெகுவாகக் கஷ்டப்பட்டு, முடிவில் இராவணனைக் கொன்று, அவளைச் சிறையினின்றும் மீட்டு அயோத்திக்குச் சென்று, அவளுடன் சுகமாக வாழ்ந்திருந்தனர்.

**பிரிந்தும் மறவாமை பெண்டிர் கடமை.**

**—இராமாயணம்.**

---

## 11. மனைவியின் கடமை (5)

ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவுக்குச் சிரேஷ்டமான மனைவி **உருக்குமிணி** என்பவள். அவள் பகவானை மெய்யன்புடன் நேசித்துவந்தாள். அவளிடம் பகவானுக்கும் உண்மையான அன்பு பொருந்தியிருந்தது. இப்படியிருக்க, பகவானுடைய மற்றொரு மனைவியாகிய **சத்திய பாமை** என்பவளுக்கு, தன்னிடமே தன் நாதனுக்கு அதிகப் பிரியம் என்ற அகந்தையுண்டு. அவள் தன் ஆடை, ஆபரணம், சௌந்தரியம், சொற்சாதுர்யம்




பீஷ்மர் பிரமசரியவிரதம் பூணுதல்

—20-ம் பக்கம் பார்க்க.




சபரி ராமருக்கு அன்புடன் விருந்தளித்தல்

—22-ம் பக்கம் பார்க்க.

முதலியவைகளால் நாயகனை வசப்படுத்தினேம் என்னும் தப்பெண்ணத்தால் கர்வம் கொண்டிருந்தாள். அவள் தன் கணவன் தீர்க்காயுளா யிருக்கவேண்டும் என்னும் எண்ணத்துடன் ஒருசமயம் ஒரு விரதம் அனுஷ்டித்தாள்; அவ்விரதத்தின் விதிப்படி தன் கணவனை அலங்கரித்து, ஒரு மரத்தில் கட்டி, நாரதருக்குத் தானம் செய்தாள். பின்னர் அந்த விரதத்தின் விதிப்படியே தன் கணவனை மீட்டுக்கொள்ள, நாரதர் கேட்கும் விலையை அவள் கொடுக்கவேண்டி யிருந்தது. பகவான் நிறைக்குச் சரியான பொன் முதலிய விலையுயர்ந்த வஸ்துக்களை நாரதர் வேண்டினர். உடனே சத்தியபாமை ஒரு தராசைக் கொண்டுவரச் சொல்லி, அதன் தட்டொன்றில் பகவானை இருத்தி, மற்றொரு தட்டில் தனது ஆபரணங்கள் முதலியவற்றைக் கொண்டுவந்து கொட்டினள். பகவான் இருந்த தட்டு உயரவேயில்லை. உடனே தன்னிடமிருந்த மற்ற விலையுயர்ந்த வஸ்துக்கள் எல்லாவற்றையும் கொண்டு வந்து போட்டுப் பார்த்தாள். அப்பொழுதும் பகவானைத் தாங்கும் தட்டு அசைவதாகக் காணவில்லை. அதற்குமேல் அவளிடத்தில் கொடுக்கத்தகுந்த பொருளில்லை யாகையால், கணவனை இழக்கும்படி நேர்ந்ததே என்ற துக்கம் அவளுக்கு அதிகரித்துவிட்டது. பிறகு மிகுந்த பரபரப்புடன் ஓடித் தனது சக்களத்திமார்களை அழைத்து, அவரது ஆபரணங்களையும் கொண்டுவந்து போடும்படி வேண்டிக்கொண்டாள். அவர்களும் அப்படியே செய்தார்கள். அவ்வாறு செய்தும் ஒன்றும் பயன்படாமற் போய்விட்டது. முடிவில் உருக்குமிணி வந்து, தான் பகவானை

அந்தரங்கமாக அர்ச்சனை செய்ய வைத்திருந்த ஒரு துளசி தளத்தை எடுத்துக்கொண்டு அந்தச் சபைக்கு வந்து, மிகுந்த பக்தியுடன் அதைத் தட்டில் இருக்கும் ஆபரணக்குவியலின்மேல் வைத்தாள். உடனே பகவானிருந்த தட்டு மேலே கிளம்ப, தராசு சம நிலைக்கு வந்தது. அங்கிருந்தோர் எல்லோரும் உருக்குமிணியின் ஆடம்பரமற்ற அந்தரங்க பக்தியை மெச்சிப் புகழ்ந்தனர். அவளுடைய உள் அன்பு அன்றுதான் எல்லோருக்கும் வெளியாயிற்று.

கற்பிற்கழகு கருத்தோருமித்தல்.

---

## 12. குரு பக்தி

முற்காலத்தில் **கார்த்தவீரியார்ஜுனன்** என்று ஒருவன் இருந்தான். அவன் **தத்தாத்ரேயர்** என்ற மகரிஷியைக் குருவாக நாடி அவருக்குப் பணிவிடை செய்துவந்தான். ஒரு நாள் குரு, நித்திரை செய்யுங் காலத்தில், அவர் பாதங்கள் இரண்டையும் அவன் மெதுவாகப் பிடித்து, அவருக்குச் சுகத்தை உண்டாக்கிக்கொண்டிருந்தான். அந்த மகாத்மாவின் உள்ளங் கால்களில் இருந்த ஸூக்ஷ்மாக்னியானது கார்த்தவீரியார்ஜுனனது கைகளை எரித்துவிட்டது. இந்தக் கஷ்டம் வந்தும், கையிழந்த சரீரத்தால் அவன் தன் குருவைத் தடவிக் கொடுத்து சுகப்படுத்திக்கொண்டிருந்தான். உடனே ரிஷி விழித்துச் சிஷ்யனுடைய கஷ்டத்தைப் பார்த்து, தன்னுடைய ஞானதிருஷ்டியால் அதன் காரணத்தை அறிந்தார். தன் கஷ்டத்தைக்கூடக் கவனியாது மிகுந்த பக்தியுடன் கார்த்தவீரியன் பணிவிடை செய்ததற்கு மெச்சி, அவனுக்

குத் தீர்க்காயுளும், ஆயிரம்கரங்களும், சக்கரவர்த்தி நிலைமையும் உண்டாகும்படி ஆசீர்வதித்தார். அவ்வாறே அவன் ஆயிரம் கைகளையும், பிறவற்றையும் அடைந்து சக்கரவர்த்தியாகி, நெடுங்காலம் பிரஜைகள் சந்தோஷிக்க, சுகமாக இராஜ்யம் ஆண்டுவந்தான்.

**நாடுதற்கரிய பொருளும் குருபக்தியால் கைகூடும்.**

---

## 13. குருமொழி கேளாமை

சூரிய வம்சத்து அரசனான திரிசங்கு என்பவன் மனுஷ்யதேகத்துடனே சுவர்க்கம்போக உத்தேசித்து, அவ்வாறு போகத் தனக்குச் சக்திவரும்படி அனுக்கிரகிக்கவேண்டும் என்று தன் குலகுருவாகிய **வசிஷ்ட**ரைப் பிரார்த்தித்தான். அவர் தம்மால் அவ்வாறு செய்ய முடியாதென்றார். அதன்மேல் அத் திரிசங்கு, அவர் பகைவராகிய **விசுவாமித்திரர்** என்னும் மகரிஷியிடம் சென்று, தன் எண்ணத்தை எடுத்துரைத்தான். அவ் விசுவாமித்திரர் தம் தபோபலத்தால் அவனைச் சுவர்க்கமடையும்படி செய்தார். ஆனால் தேவர்களுக்கரசனாகிய இந்திரன் அவனைச் சுவர்க்கத்திலிருந்து தள்ளிவிட, அவன் கீழே விழுகையில், விசுவாமித்திரரை அலறிக் கூப்பிட்டு, 'அபயம், அபயம்' என்றான். அவர் மனமிரங்கித் தம் சக்தியினால் அவனை அந்தரத்திலேயே நிறுத்தினார். இதனால் திரிசங்குவுக்குப் பற்றுடைய ஒரு நிலையுமின்றிப் போனதனால், அவன் யாவராலும் இகழ்ந்து பேசப்பட்டான். மகிமைபெற்ற தன் குருவான வசிஷ்டரின் கட்டளையை மீறியதால், அவன் இக்கதியை அடைந்தான். இப்பொழுதுங்கூடப் பற்-

றில்லாத் தசையில் இருக்கிற ஒரு மனிதனை, 'திரிசங்கு சுவர்க்கம் அடைந்தவன்' என்று சொல்வது வழக்கம்.

**குரு ஆணை மறுப்பவனுக்குத் திரிசங்கு சுவர்க்கமே கதி.**

**—இராமாயணம், பால காண்டம்.**

---

## 14. சகோதர வாத்ஸல்யம்

அயோத்தியா நகரத்தில் கீர்த்திபெற்ற அரசராகிய ஸ்ரீராமரிடத்திலே அவர் சகோதரர்களில் இலக்ஷ்மணன், பரதன் என்ற இருவரும் சிறந்த பக்தி வைத்திருந்தனர். ஸ்ரீராமர் காட்டுக்குப் போகத் தீர்மானித்த செய்தியைக் கேட்டவுடனே, இலக்ஷ்மணன் 'நானும் கூடப் புறப்படுவேன்' என்று பிரார்த்தித்து, இராமரோடு காடுசென்று, ஊணையும், உறக்கத்தையுங் கூடக் கவனியாது, காட்டில் அவர் சஞ்சாரம் செய்த காலம் முழுவதும் அவருக்கு வேண்டிய சகாயங்களைச் செய்து உபசரித்துவந்தான். பின்னர், இந்திரஜித்தினுடைய பாணத்தால் அடிபட்டு அவன் மூர்ச்சை யடைந்தவுடன், அவனது நிலையைக் கண்ட இராமர் கண்ணீர்விட்டழுது, 'மனைவியை எவர்களும் சம்பாதிக்கலாம்; சகோதரர்களையோ சம்பாதித்தல் அரிது' என்று கதறி, தன் மனைவியை விடுவிக்கச் செய்த முயற்சியை அதனோடு விட்டு விடவும் எண்ணினார். இப்படி இருக்கையில் இலக்ஷ்மணன் மூர்ச்சை தெளிந்து எழுந்தான். மேல் நடக்க வேண்டியவை யெல்லாம் முறையே நடந்தேறின.

இவன் செய்தி இப்படியாக, மற்றொரு சகோதரனான பரதனோ, இராமரைக் காணாத சமயங்களிலும்

அவரிடம் மாறாப் பக்தியை வைத்திருந்தான். ஸ்ரீராமரை வனத்துக்கு அனுப்புவித்துத் தனக்கு பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று தன் தாய் கைகேயி மிகுந்த அன்புடன் செய்த பேருதவியைப் பரதன் உதவியெனக் கருதாது, சகோதரத் துரோகமென மதித்து, ஸ்ரீராமர் வசித்துக் கொண்டிருந்த சித்திர-கூட பர்வதம் சென்று, 'திரும்பிவந்து, எப்படியாவது இராஜ்யத்தை ஒப்புக்கொள்ள வேண்டும்' என்று அவரை மிகுந்த உருக்கத்துடன் பிரார்த்தித்தான். இவ்வார்த்தைகளுக்கு இராமர் இசையாதது கண்டு, அவர் உத்தரவின்படி அவரது பாதுகைகளைத் தன் சிரமேல் தாங்கி அயோத்தி வந்து, அவரது ஸ்தானத்தில் அவைகளை வைத்து, இராஜபோகங்களில் எதையும் தான் கொள்ளாமல் ஜடை மரவுரி முதலியவை அணிந்த ஸ்ரீராமரைப்போலத் தானும் ரிஷி வேடம் பூண்டு, நந்திக்கிராமத்தில் இருந்துகொண்டு, அவரது பிரதிநிதியாக இராஜ காரியங்களைப் பார்த்துவந்தான். ஸ்ரீராமர் வனத்திலிருந்து திரும்பி வரும்வரையில் அவன் அப் பதினான்கு வருஷமும் ஒரே உறுதியாக இருந்தான். குறித்த காலத்தில் இராமர் திரும்பிவந்து அவன் உள்ளன்பைக் கண்டு மெச்சி, அவனை மார் புறத் தழுவிக்கொண்டார்.

**தமையன் தந்தைக்குச் சமம், தம்பி பிள்ளைக்குச் சமம்.**

**--இராமாயணம், அயோத்தியா காண்டம், யுத்த காண்டம்.**

---

## 15. சகோதர மரியாதை

பாண்டவர் ஐவருள் தருமராஜன் மூத்தவர். அவர் தம்பிகளான பீம அர்ஜுன நகுல சகதேவர்கள்

அவரிடத்தில் மிக்க மரியாதை பாராட்டி அடங்கி நடந்தார்கள். தம்பிகள் ஒவ்வொருவரும் தமையனுரைப் பார்க்கிலும் ஒவ்வொன்றில் சிறந்தவரா யிருந்தாலும், தமையனுாது நீதி, ஒழுக்கம் பொறுமை முதலியவற்றைக்கண்டு, அவரைக் கடவுளாகப் பாவித்து வணங்கி வந்தார்கள். சிற்சில சமயங்களில் அவரது குற்றத்தால் பெரிய கஷ்டங்கள் வந்தபோதிலும், பொறுமையாக அடங்கி இருந்தார்களேயன்றி, அவருடைய சொல் தவறி நடக்கவில்லை. அதாவது தருமராஜன் துரியோதனனேடு சூதாட இசைந்து தங்களுக்குப் பொதுவான ஸ்திரீயாகிய திரௌபதியை இழக்க, அவள் அப்பொழுதுபட்ட கஷ்டத்தைப் பார்த்தும் தம்பிமார், தமையனுருடைய நோக்கத்திற்கு விரோதமாக நடக்கவேயில்லை.

மேலும் ஒரு சமயத்தில் பாண்டவர்கள் மழை, குளிர் முதலியவற்றுல் காட்டில் மிகவும் வருந்திக் கொண்டிருந்தனர். தம்பிமார் அந்தச் சமயத்தில்கூட தருமராஜனை மீறிநடக்கவில்லை. அப்போது இவர்களுடைய மனவருத்தத்தை அதிகப்படுத்த துரியோதனன், தன் பரிவாரங்களுடன் அருகிலிருந்த ஒரு கந்தர்வ ராஜனுடைய தோட்டத்திற்கு வந்து அங்கு உல்லாசமாக விளையாடத் தொடங்கினுன். உடனே அக்கந்தர்வ ராஜன் அவர்கள் எல்லோரையும் சிறை பிடித்துக்கொண்டு போய்விட்டான். அப்பொழுது துரியோதனுதியர் இட்ட கூக்குரல், மகாத்மாவான தருமராஜன் காதில் விழ, அவர்களை உடனே விடுவிக்கும்படி தம் தம்பிகளுக்கு அவர் உத்திரவு செய்தார். அவ்வாறே அர்ஜுனன் சென்று அவர்களை விடு-

வித்துவிட்டுத் திரும்பிவந்து, தருமராஜனை நோக்கி, "இம்மாதிரி, கொடியவர்களிடத்து இரங்குவது தருமமோ?" என்று கேட்டான். அதற்குத் தருமராஜன், "நம்மை வெளிவிரோதி யாராவது வந்து எதிர்த்தால், நாம் நூற்றைவ ராவோம். நமக்குள் சண்டையேற்பட்டால் நூறுபேரும், ஐந்துபேருமாக நாம் பிரிவோம். மேலும் தீமை செய்வோர்க்கு நன்மை செய்வதே பெரியோர் கடமை" என்று மறுமொழி கூறினார்.

**சேர்ந்த வாழ்க்கையே சிறந்த வலிமை** என்பது சகோதர மரியாதையின் உட்கருத்து.

—மஹாபாரதம், ஆரணியபர்வம்.

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்தோ சால்பு. —திருவள்ளுவர்.

---

# II. தரும விஷயம்

---

## 16. தருமமே ஜயம்

அஸ்தினபுரத்தை ஆண்டுவந்த அரசர்களுள் **திருதராஷ்டிரன்** என்றும் **பாண்டு** என்றும் சகோதரர் இருவரிருந்தார்கள். பாண்டு ஐந்து குமாரர்களை விட்டுவிட்டுப் பால்யத்திலேயே இறந்துபோனார். அக்குமாரர்களுள் மூத்தவர் பெயர் **தருமபுத்திரர்**. அந்தப் பெயருக்குத் தக்கபடி அவர் எக்காலத்திலும் தருமநெறி தவருது நடந்துவந்தார். திருதராஷ்டிரனுக்கு நூறுபிள்ளைகள் இருந்தார்கள். அவர்களில் மூத்தவன் பெயர் **துரியோதனன்;** அவன் மிகுந்த முரடன். பேராசையும் கர்வமும், மோசமும் அவனிடம் குடிகொண்டிருந்தன.

அவனுடைய தம்பிகளும் அவனுக்குத் தகுந்தவர்களா கவே இருந்தார்கள். இவ்விரு குடும்பத்தாருக்கும் பொ துவாயிருந்த ராஜ்யத்தில் தமக்கும் தம் தம்பிமார்களுக் கும் பாகம் வேண்டுமென்று தருமபுத்திரர் சாந்தமாக வும் ஒழுங்காகவும் துரியோதனனிடம் கேட்டார். துஷ்டனான துரியோதனன் கொடுக்கமாட்டேனென்று பிடிவாதமாக மறுத்துவிட்டான். அந்தத் துரியோதன னால் பாண்டவர்களுக்கு நேர்ந்த கஷ்டங்கள் அநே கம். முடிவில் பஞ்சாயத்தின்மேல் அவர்களுக்குப் பூர் வீக சொத்தில் பாகம் கிடைத்தது. 'சிறுகக் கட்டிப் பெருகவாழ்' என்ற பழமொழிப்படி அந்தப் பாகத்தை வைத்துக்கொண்டு பாண்டவர்கள் தமது முயற்சியால் அதை அதிகமாக விருத்திசெய்து, ஒரு பெரிய யாகத் தையும் நடத்தி, மிகுந்த சிறப்பையும் அடைந்தார்கள். இதைப் பார்த்ததும் துரியோதனன் அடங்காப் பொ றாமை கொண்டு, வெகு தந்திரமாகத் தருமபுத்திரரை அழைத்துத் தன் மாமன் சகுனியுடன் சூதாடச்செய்து அதன்மூலமாக அவரது செல்வம் முழுவதையும் பறித் துக்கொண்டு, அவரையும் அவரது சகோதரர்களையும் பதிமூன்று வருஷம் வனத்தில் வசிக்கும்படி துரத்தி விட்டான். உடன்படிக்கையின்படி வனவாசம் முடிந்த தும் தருமபுத்திரர் தமது பாகத்தை தம்மால் இயன்ற மட்டும் நியாய வழியில் பெற முயன்றார். பேராசை யால் துரியோதனன், ஊசி குத்துமிடங்கூட இந்த ராஜ்யத்தில் நான் உங்களுக்குக் கொடேன் என்று சொல்லிவிட்டான். இதனால் மஹாபாரத யுத்தம் தொடங்கிற்று. ஸ்ரீகிருஷ்ணனது சகாயத்தாலும், மற்றுமுள்ள அரசர்களது உதவியாலும், பாண்டவர் கள் பதினெட்டு நாள் யுத்தஞ்செய்து கஷ்டப்பட்டுத்

துரியோதனுதியரைக் கொன்று ஜயமடைந்தார்கள். பிறகு தருமபுத்திரர் தமது பூர்வீக இராஜ்யத்திற்கு அரசராக முடிசூட்டப்பட்டுச் சிங்காதானம் ஏறி, வெகு காலம் நெறிதவருது செங்கோல் செலுத்திவந்தார். இவர் பெயர், இன்றைக்கும் நெறிதவருது ஆள்பவர் என்ற பொருளில் வழங்கிவருகிறது. துரியோதனன் பெயரோ, துர்ப்புத்தியுள்ள மூர்க்கன் என்ற பொருளில் வழங்குகிறது.

**தருமம் தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்.**

—மஹாபாரதம்.

---

## 17. பரோபகாரம்

ஏகசக்ரபுரம் என்னும் ஊரில் ஒரு பிராமணன் வீட்டில் **குந்திதேவியும்** அவளது வல்லமையுள்ள புத்திரர்கள் ஐவரும் கொஞ்சகாலம் மாறுவேஷம் பூண்டு வசிக்கும்படி நேரிட்டது. அவ்வூருக்குச் சமீபத்திலிருந்த ஒரு வனத்தில் **பகாசுரன்** என்னும் பெயருள்ள ஒரு கொடிய இராக்ஷஸன் இருந்தான். அவன் தனக்குப் பசிவந்த சமயத்தில் அந்தக் கிராமத்துள் வந்து, அநேகம் ஆடுமாடுகளையும், ஸ்திரீ புருஷர்களையும், குழந்தை குட்டிகளையும் விழுங்கிக்கொண்டு வந்தான். அந்த இராக்ஷஸனை அடக்க அந்தக் கிராமத்தார்களுக்குத் திறமை இல்லாமையால், அவனுக்கு நாள்தோறும் இரண்டுவண்டி பாரம் சோறு முதலியவைகளையும், ஒரு புருஷனையும் ஆகாரமாக அனுப்புகிறது என்பதாகவும், அதற்குப் பதிலாக அவன் தன் இஷ்டப்படி கிராமத்தைக் கஷ்டப்படுத்துகிறதில்லை என்பதாகவும் ஏற்பாடு செய்துகொண்டு, ஒவ்வொரு

வீட்டாரும் ஒவ்வொரு நாளாக இம்முறையை நடத்திக்கொண்டுவந்தனர். ஒருதினத்தில் குந்திதேவி முதியோர் தங்கியிருந்த வீட்டுக்காரன் முறை வந்தது. வரவே, அந்த வீட்டுக்குள் குழப்பம் உண்டாயிற்று. "கைம்பெண்ணுகி இருப்பதைக் காட்டிலும், சுமங்கலியாய் மரணமடைதல் உத்தமம்; ஆதலால் நான் போகிறேன்" என்று வீட்டு யசமானியும், "பெற்றோர்களுக்கு வேறு குழந்தை உண்டாகலாம்; ஆதலால், நாங்கள் போகிறோம்" என்று குழந்தைகளும், "அதிகநாள் உயிரோடிருந்து பாவத்தைத் தேடிக்கொண்டு வருந்துவதைப்பார்க்கிலும் சீக்கிரத்தில் இறப்பது நலம்; ஆதலால், நான் போகிறேன்" என்று வீட்டு யசமானனும் தருக்கம் செய்துகொண்டிருந்தனர். எல்லாவற்றையும் கேட்ட குந்திதேவி, இவர்கள் சஞ்சலத்தைக்கண்டு பரிதபித்து, பரோபகார சிந்தையால் மனமுருகித் தன் குமாரர்களுள் பீமன் என்பவனை அனுப்புவதாகச் சொன்னாள். அப்போது அவ்வீட்டு யசமானன் முதியோர் செய்த ஆக்ஷேபனைகளுக்கெல்லாம் தக்க சமாதானங்கள் கூறி, முடிவில் பீமனது பராக்கிரமங்களை எடுத்துரைத்ததோடு, பகாசுரன் பயம் அன்றோடு நீங்கிவிடும் என்றும் கூறினாள். அப்போது யாவரும் இந்த ஏற்பாட்டிற்கு ஒப்புக்கொள்ள, பீமன் சோற்று வண்டியுடன் வனஞ்சென்றான். அங்குப் பகாசுரன் வரும் முன்னர், இரண்டுவண்டிச் சோற்றையும் உண்டான். உண்டு எழுந்திருக்குந் தருணத்தில் பகாசுரன் வந்து சண்டையிட, அவனை வெகு எளிதில் கொன்று ஏகசக்ரபுர வாசிகளுக்கு நேரிட்டிருந்த பயத்தைத் தீர்த்தான். **பரோபகாரமே பரம தருமம்.**

**—மஹாபாரதம், ஆதி பர்வம்.**

## 18. உண்மையின் உயர்வு

முற்காலத்தில் அரிச்சந்திரன் என்று ஓர் அரசன் இருந்தான். உண்மையை, அவன் எக்காலத்தும் கை விடாமல் காப்பாற்றிவந்தான். இதனல் அவன் பெயர் சத்தியசந்தன் என்னும் பொருளில் இன்றும் வழங்கி வருகிறது. உண்மையைத் தவிர வேறொன்றும் சொல்வதில்லை என்னும் அவன் மனவுறுதியைப்பற்றி ஒருசமயம் அவன் குருவாகிய வசிஷ்டருக்கும், அவர் பகைவராகிய விசுவாமித்திரருக்கும் ஒரு தர்க்கம் உண் டாயிற்று. அதன் முடிவில், விசுவாமித்திரர், "எப்படி யாவது அரிச்சந்திரனை ஒரு பொய் சொல்லும்படிச் செய்துவிடுவேன்" என்று சபதம் கூறினர். அதன் பின்னர் அவர் அரிச்சந்திரனைச் சந்தித்து, அவனைப் பற்பல விதமாகக் கட்டுப்படுத்தி சத்தியத்தைவிட்டு விலகும்படி செய்ய முயன்றார். அம்முயற்சிகள் வீண் னதுகண்டு, அவர் தந்திரமாக அவனிடமிருந்து இராஜ் யத்தை அபகரித்துக்கொண்டு, அவனையும் அவன் மனைவியையும் காட்டுக்குத் துரத்திவிட்டார். அதுவு மன்றி அவனை ஓர் உடன்படிக்கைக்கு உட்படுத்தி, அவன் மனைவியையும் பிள்ளையையும் பிரித்துவேறொரு பிராமணனுக்கு அடிமை யாக்குவித்தார். பிறகு அர சனையும் ஒரு சுடலை காப்போனுக்கு அடிமைப்படுத் தினர். அவனது பிள்ளையைப் பாம்பு கடித்து இறக் கும்படியும் செய்துவைத்தார். இவ்வாறெல்லாஞ் செய் தும் தங்கருத்து ஒன்றும் முடியாமற் போகவே, அவர் வெகு தந்திரமாக அவன் மனைவி சந்திரமதியின்மேல் பொய்க்குற்றம் சாட்டுவித்து, அவளை அவ்வரசன் கையாலேயே வெட்டும் நிலைமையையும் உண்டாக்கி

னர். இந்தச் சமயத்தில் அவர் ஓடிவந்து, “நீ எனக்கு இராஜ்யம் ஒன்றும் கொடுக்கவில்லை யென்று சொல்லி விடு; இந்தக் கஷ்டங்களெல்லாம் இப்போதே நீங்கி விடும்” என்று சோதித்தும் பார்த்தார். “இதைப் போல் இனி எவ்வளவு ஆபத்து வந்தபோதிலும் சத்தி யத்தைக் கைவிடமாட்டேன்” என்று அரசன் உறுதி யாகச் சொன்னன். உடனே, அரசன் இருந்தவிடம் கைலாசமாக மாறிவிட்டது. தேவர்கள் தேவனுகிய பரமசிவன் மற்றையத் தேவர்களுடன் அவனுக்குத் தரிசனம் கொடுத்தார். விசுவாமித்திரர் தம் சபதப் படி தம் தவத்தில் பாதியையும், தாம் வாங்கியிருந்த இராஜ்யம் முதலியவைகளையும் கொடுத்து, அரிச்சந்தி ரனை முன்னிருந்த நிலையில் இருத்தினர்; குழந்தை யையும் உயிர்ப்பித்துக் கொடுத்தார். எல்லோரும் புகழ, அரிச்சந்திரன் இராஜ்யம் பெற்று, மனுநெறி தவருது நெடுங்காலம் அரசாண்டுவந்தான்.

உண்மையின் உயர்ந்த ஒழுக்கமில்லை.

—மஹாபாரதம், ஆரணிய பர்வம்.

---

## 19. சொல் தவருமை

பலிசக்கரவர்த்தி அரசாளுகையில், ஒரு சமயம் இந்திரன் தானிருக்குமிடம் தெரியாமல் மறைந்திருந் தான். அதனல் தேவதைகளுக்கு மிகுந்த கஷ்டம் நேர்ந்தது. இப்படியிருக்க மஹாவிஷ்ணு, தேவதை களுக்கு நன்மை செய்ய வாமன உருவங்கொண்டு பலிசக்கரவர்த்தி யாகம் செய்துகொண்டிருக்கையில் அவர்முன் வந்து நின்றூர். அந்த யாகத்தில், யாசிப் போர் கேட்பதை யெல்லாம் கொடுப்பதாகச் சங்கல்

பம் செய்துகொண்டிருந்த பலி சக்கரவர்த்தி, வாமன மூர்த்தியை நோக்கி, "உமக்கு வேண்டியதை இஷ்டம்போல் கேட்டுக்கொள்ளும்; 'கொடுக்கச் சித்தமாகக் காத்திருக்கிறேன்" என்று கூறினர். அப்பொழுது வாமனரூபி, தம் காலடியால் மூன்று அடி பூமி கொடுத்தால் போதும் என்று கேட்டார். மஹாபலி, 'கொடுத்துவிட்டேன்' என்று கூறி, அவரது கையில் நீருடன் தானம் செய்ய முயன்றார். அப்பொழுது அவர் குருவாகிய சுக்ராசாரியர் வாமனரது நிஜரூபம் இன்னதென்பதை எடுத்துக் கூறி, "அவசரமாகத் தானம் செய்துவிட்டால், பின்னர் அபாயம் நேரிடும்" என்று எச்சரிக்கை செய்தார். அதற்குப் பலி, "நான் சொன்ன சொல் தவறேன்; அவ்வாறு தவறுவதைப் பார்க்கிலும் மரணத்தை யாவது அடைந்து கஷ்டப்படுவதே சிறந்ததாகும்" என்று மறுமொழி கூறினர். உடனே 'மூன்றடி மண் தத்தம்' என்று வாமனர் கையில், பலி தாரை வார்த்தார். அவ்விதம் தானம் பெற்றவுடனே, வாமனர் தமது பெரிய திருவிக்ரம உருவை எடுத்துக்கொண்டு, ஓர் அடியால் பூமி முழுவதையும், மற்றோர் அடியால் ஆகாயம் முழுவதையும் அளந்து, பலியின் வாக்கு உறுதியைச் சோதிக்கும் பொருட்டு, "சொன்ன சொற்படி, மூன்றும் அடியை வைக்க இடம் காட்டு" என்று கேட்டார். அதற்குப் பலி தன் சிரசைக் காட்டினர். திருவிக்ரம மூர்த்தி தமது திருவடியைப் பலியின் தலையில் வைத்து, அவரோடு அவருடைய பரிவாரங்களையும் பாதாளத்தில் அழுத்தி, பிறகு அவரைத் தமது சிறந்த பக்தனுகச்செய்து, வெகுகாலம்

கழித்து இந்திர பதவியைப் பெறும்படியும் அனுக்கிரகித்தார். இச் சிறப்பெல்லாம் சொல் தவறாமையால் பலிச்சக்கரவர்த்திக்குக் கிடைத்தது.

**உயர்ந்தோர்க்கழகு உறுதி யுடைமை.**

**—பாகவதம், 8-வது ஸ்கந்தம்.**

---

## 20. உதார குணம்

உலகில் வெகுநாள் வாழ்ந்திருந்து பிறகு தருமபுத்திரர், சுவர்க்கத்திற்குப் போகையில் ஒரு நாய் அவரைப் பின்தொடர்ந்து சென்றது. போகும் வழியில் அவர் பத்தினியும் தம்பிமார்களும் ஒருவர்பின் ஒருவராக விழுந்து இறந்தார்கள். இந்த நாய் மாத்திரமே உயிருடன் கூடியதாய், அவரை விடாது தொடர்ந்து சென்றது. இப்படித் தருமபுத்திரர் சுவர்க்கவாசல் சென்றதும், அங்குச் சுவர்க்காதிபதியாகிய இந்திரன் அவர்முன் தோன்றி அவரை, 'சுவர்க்கத்தில் பிரவேசிப்பீராக' என்று வேண்டிக்கொண்டான். நீதிமானாகிய தருமராஜன், தம்முடன் விடாது தொடர்ந்து-வந்த நாயையும் கூட அழைத்துக்கொண்டுபோக உத்தரவு கொடுக்கும்படி இந்திரனை வேண்டிக்கொண்டார். அதற்கு இந்திரன், "நற்கர்மங்கள் செய்தவர்கள் மாத்திரந்தான் சுவர்க்கப்பிரவேசம் செய்யலாம்; இந்த அற்பப் பிராணியாகிய நாய், சுவர்க்கத்துள் வரவே கூடாது" என்று கூறித் தடுத்தான். "நாய் போகக் கூடாதென்றால், எனக்கும் இந்தச் சுவர்க்கம் வேண்டாம்" என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டார் தருமபுத்திரர். விசுவாசமுள்ள நாயைப்பற்றி இந்திரன் பலவாறாகத் தர்க்கம் செய்தும், தருமபுத்திரரை



சீதையின் கஷ்டம்

—30-ம் பக்கம் பார்க்க.



கௌசிகர் தவம் வீணானது

—68-ம் பக்கம் பார்க்க.

இணங்குவிக்க முடியாமற் போகவே, அவர் காட்டிய மாரு அன்பிற்காக, முடிவில் நாயையும் சுவர்க்கத்திற்குள் வரவிடுவதாக ஒப்புக்கொண்டான். அந்த நாய், தருமபுத்திரருடைய உதாரகுணத்தைப் பரீக்ஷிக்க வந்த யமதர்மராஜனே தவிர வேறில்லை. யமதர்மராஜன் தன்னுடைய நிஜரூபத்துடன் தருமபுத்திரர் முன் தோன்றி அவரை மிகச் சிறப்பாகப் புகழ்ந்து பேசினன்.

**உதாரகுணமே உத்தமர்க்கு ஓர் அணியாம்.**

**—மஹாபாரதம், மஹாப்ரஸ்தான பர்வம்.**

---

## 21. நேர்மை

சங்கர் என்றும், லிகிதர் என்றும் இரண்டு ரிஷிகள் இருந்தனர். அவர்கள் இருவரும் ஸ்மிருதி கர்த்தர்கள். அவர்களுடைய ஆசிரமம் ஒரு தோட்டத்தின் நடுவில் இருந்தது. அந்தத் தோட்டம் அவ்விருவருக்கும் பொதுவானது. சங்கர் அந்த ஆசிரமத்தை விட்டு வெளியே போயிருந்தகாலத்தில், அவருடைய தம்பியாகிய லிகிதர், அங்கிருந்த ஒரு மரத்தின் பழமொன்றைப் பறித்துத் தின்றார். அச் சங்கதி, சங்கர் வந்ததும் அவருக்குத் தெரிய, அவர் லிகிதரை நோக்கி, "நீ பழத்தைத் தொடுமுன், பங்காளியான எனது சம்மதத்தைப் பெற்றிருக்க வேண்டுமல்லவா? அவ்வாறன்றி நீயே பழத்தைத் தின்றது நியாய விரோதமான செயல்" என்று சொன்னர். லிகிதர் வியவகாரம் நன்கு அறிந்தவராகையால், தமது நடத்தை நியாயமானது அன்று என்று அறிந்து, அவ்வாறு நெறி தவறியதற்காகத் தகுந்த தண்டனை பெறும் பொருட்டு அரச

னிடஞ் சென்ருர். அரசனைக் கண்டு, தாம் செய்த குற்றத்தை ஒளிக்காது வெளிப்படுத்தித் தமக்குத் தகுந்த தண்டனை விதிக்க வேண்டும் என்ருர். அரசன் மனு தரும சாஸ்திரத்தை ஆராய்ந்துபார்த்து, அதில், "பிறர் சொத்தை அபகரிப்பவன் கையை வெட்டிவிட வேண்டும்" என்று இருந்ததைக் கண்டான். ஆனல் அத் தண்டனையை விதிக்க அவனுக்கு மனம் வரவில்லை. அப்போது லிகிதர், "நானே குற்றம் செய்தவன் என்று உமக்குத் தெரியும்; குற்றவாளிக்குத் தண்டனை விதிக்க வேண்டியது உமது தருமம். ஆதலால் உமது தருமத்தைத் தவருமல் நடத்திவிடு" என்று தூண்டினர். அரசன் அத்தண்டனையை விதிக்க, அவர் கைவெட்டுண்டார். எல்லோரும் லிகிதரது நேர்மையைக்கண்டு மிக வியந்தனர். அத்தருணத்தில் கடவுள் கிருபையால் வெட்டுண்ட கையும் வளர்ந்து முன்போலாயிற்று.

**உற்றது சொன்னல் அற்றது பொருந்தும்.**

—மஹாபாரதம், சாந்தி பர்வம்.

---

## 22. பக்ஷபாதமின்மை (1)

சூரிய குலத்தில் திருஷ்டன் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் நெறிவழுவாது தன் ராஜ்யத்தைப் பரிபாலித்து வந்தான். அவன் பிள்ளையாகிய நாபாகன் என்பவன், ஸ்வப்ரபா என்ற ஒரு வைசியப் பெண்ணைக் கண்டு மோகித்து, அவளை விவாகம் செய்து கொள்ள எண்ணி அவளுடைய தகப்பனிடம் சென்று, அப்-பெண்ணைத் தனக்குக் கொடுக்கும்படி கேட்டான். க்ஷத்ரியனுக்கு வைசியப்பெண்ணை விவாகம் செய்து கொடுத்தல் மனுநீதிக்கு விரோதம் என்று அப்பெண்

ளின் தகப்பனும் பாட்டனும் மறுத்துவிட்டார்கள். இதைக் கேட்டதும் இராஜகுமாரன் மிகுந்த கோபங் கொண்டு, தான் அந்தப் பெண்ணை எடுத்துக்கொண்டு போவதாகவும், அப்பொழுது யாராவது தடுத்தால் அவர்களைக் கொன்றுவிடுவதாயும் கூறிப் பயமுறுத்தினன். அப்பெண்ணின் தகப்பன் நடுநடுங்கிப் போய்த் திருஷ்டனிடம் சென்று, நாபாகனது கொடுஞ்செய்கையைக்குறித்து முறையிட்டான். அப்பொழுது அரசன் தன் துஷ்டப் பிள்ளையை எப்படியாவது பிடித்துத் தன் முன் கொண்டுவர வேண்டுமென்று தன் சேனாதிபதிக்கு உத்தரவளித்தான். நாபாகன் தன்னைப் பிடிப்பதற்காக எதிர்வந்த சேனைத் தலைவனைக் கொன்று, அரசன் கட்டளைக்குட்படாது கர்வமுற்றிருந்தான். அப்பொழுது அரசன், தனது சேனையோடு சென்று அவனைச் சிறைப்படுத்தி, அவனுக்குத் தகுந்த தண்டனை விதித்தான்.

இம்மாதிரியே ஸரயூநதியில் குழந்தைகளைப் பிடித்துத் தள்ளி அவைகள் பட்ட கஷ்டங்களைக் கண்டு ஆநந்தித்துவந்த அஸமஞ்சன் என்னும் தன் குமாரனைச் சகர சக்கரவர்த்தி, பக்ஷபாதமின்றித் தண்டித்து நாட்டில் நன்மை யுண்டாக்கிச் சிறப்புடன் விளங்கினன்.

நிருபர்க்கழகு நிஷ்பக்ஷபாதம்.

—இராமாயணம், பாலகாண்டம்.

---

## 23. பக்ஷபாதமின்மை (2)

சூரிய வம்சத்தில் நபகன் என்னும் அரசனுக்கு அநேகம் பிள்ளைகள் இருந்தார்கள். அவன் இராஜ்யத்தைப் பிள்ளைகளிடம்விட்டுத் தான் தபோவனம் சென்

ருன். அப் பிள்ளைகளில் இளையவனாகிய நாபாகனை நோக்கி மற்றவர்கள், "நீ இராஜ்யம்விட்டுப் போய்விடு; உனக்குச் சொத்து உன் தகப்பன்தான்" என்று கூறி, இராஜ்யம் முழுவதையும் தாங்களே எடுத்துக்கொண்டு விட்டனர். தன் பிள்ளையைக் காக்கும் வழியறியாத அரசன் அவனை நோக்கி, "இப்பொழுது ஆங்கிரஸர்கள் யாகஞ் செய்கின்றனர். அவர்கள் பக்திமான்களா யிருந்த போதிலும், அவர்கள் செய்யும் யாகத்தில் சில பிழைகளுண்டு. அவர்கள் பாவம் நீங்கும்படி அவர்களுக்கு மந்திரங்களைக் கூறுவாயாகில், உனக்கு யாகத்தில் மிகுதியான திரவியங்களைக் கொடுப்பார்கள்" என்று கூற, நாபாகனும் அவ்வாறே செய்து, அந்த யாகத்திரவியங்களைப் பெற்றான். அவன் அவைகளைப் பெற்றதும், வடகிழக்குத் திக்கிலிருந்து, ஒரு கறுத்த புருஷன் தோன்றி, "இவைகள் என்னைச் சேர்ந்தவை" என்று வழக்குப் பேசினான். அதற்கு நாபாகன், "நான் இவைகளைத் தானமாகப் பெற்றிருக்கிறேன். ஆகையால் இவைகள் என்னைச் சேர்ந்தவை" என்று எதிர் வழக்குப் பேசினான். இப்படிப் பேசிக்கொண்டு நபகனிடம் சென்று, "இதைத் தீர்த்துவைக்க வேண்டும்" என்று இருவரும் வேண்டிக்கொண்டார்கள். நபகன் கொஞ்சமேனும் பக்ஷபாதமின்றி, "வைதிக சம்பிரதாயப்படி யாகத்தில் மிகுந்தவை யெல்லாம் ருத்திரனைச் சேர்ந்தவை. ஆதலால், நாபாகா! நீ பெற்றுக்கொண்டவை எல்லாவற்றையும் கரியபுருஷனிடம் கொடுத்துவிடவேண்டும்" என்று தீர்மானித்தான். நபகனுடைய பரிசுத்த மனத்தைக்கண்ட கரியபுருஷனான ருத்திரர், "என் பாகமாகிய இந்தப் பொருளை உனக்கே

கொடுத்து விடுகிறேன். நீ சற்றேனும் தயங்காது உண்மை பேசியதனால், உனக்குப் பிரமஞானத்தை யும் கொடுக்கிறேன்" என்று அனுக்கிரகித்து மறைந்து விட்டார்.

நியாயம் தீர்ப்போர் நடுநிலை நிற்பர்.

—பாகவதம் 9-வது ஸ்கந்தம்.

---

## 24. பொறுமை (1)

சிபி என்பவர் யயாதி மஹாராஜன் பேரர்களுள் ஒருவர். அவர் அரண்மனைக்கு ஒரு பிராமணன் போசனம் வேண்டுமென்று யாசிக்க வந்தார். அவருக்கு வந்தனை வழிபாடுகள் செய்து, "என்ன வேண்டுமானாலும் கொடுக்கக் காத்திருக்கிறேன்; வேண்டியதைச் சொல்லவேண்டும்" என்று மஹா விநயத்துடன் சிபி கூறினர். அப்பொழுது பிராமணன், "உன் பிள்ளையைக் கொன்று கறி சமைத்து எனக்குச் சோறிட வேண்டும்" என்று கேட்டார். சிபி சற்றேனும் பின் வாங்காது, அவருக்கு வேண்டியவைகளை ஆயத்தஞ்செய்து கொண்டு, அதிதி யிருந்தவிடம் வந்து பார்க்க அவரைக் காணாது வருந்தி, அந்த உணவைக் கையில் எடுத்துக்கொண்டு அதிதியைத் தேடப் புறப்பட்டார். அவ்விதம் புறப்பட்டுப் போகும் வழியில், அவ்வதிதி தன் அரண்மனையுட் புகுந்து, விலையுயர்ந்த தம் வஸ்துக்களைக் கொளுத்தி நாசம் செய்வதாகக் கேள்விப் பட்டார். உடனே சிபி அரண்மனையில் வந்து, பிராமணன் அவ்வாறே செய்துகொண்டிருப்பதைக் கண்டார். அதைக்கண்டும், சிபி கோபங்கொள்ளாது மஹா விநயத்துடன் பிராமணனை நோக்கி, "சாப்பாடு சித்தமாய் இருக்கின்றது" என்று தெரிவித்தார். அப்பொ

மூது அவர், "நீயே அதைப் புசித்துவிடு; எனக்குத் திருப்தியாய்விடும்" என்று கூற, சிபி அவர் ஆஞ்ஞை யைச் சிரமேற்கொண்டு, மனக் கலக்கமின்றிப் புசிக் கத் தொடங்கினர். ஆகாரத்தை எடுத்து வாயுள் வைக்கு முன்னரே, பிராமணன் அரசன் கையைப் பிடி த்துக்கொண்டு, அவரது பொறுமையை மிகக் கொண் டாடி, உடனே தமது நிஜரூபமாகிய பிரமரூபத்தைக் காட்டி, சிபி செய்த தானத்தின் பெருமைக்காகவும், அதில் அவர் காட்டிய பொறுமையின் சிறப்புக்காக-வும் அவரைப் புகழ்ந்து, "வெகுநாள் சுகமாக இருந்து நீ பரமபதம் பெறக்கடவாய்" என்று அவரை அனுக் கிரகித்து மறைந்தார்.

பொறுத்தவர் பூமியாள்வார்.

—மஹாபாரதம், ஆரண்ய பர்வம்.

## 25. பொறுமை (2)

விசுவாமித்திரரின் மூதாதைகளுள் குசிகர் என்று ஒருவர் இருந்தார். குசிகரது வம்சம் கொஞ்ச காலத்திற்கெல்லாம் பிராமண வம்சமாக மாறப்போ கின்றது என்றும், அதற்குத் தம் வம்சத்தவரே காரண மாக இருப்பார்கள் என்றும், தம் வம்சத்தவர்கள் அதற்குப் பதிலாக க்ஷத்திரியர்களாய் மாறிவிடுவார் கள் என்றும், பிருகு வம்சத்தில் பிறந்த சியவனர் கேள்விப்பட்டார்; அக் குசிகரைத் தம் விஷயத்தில் ஓர் அபராதம் செய்யும்படிச் செய்து, அவர் வம்சத் தைத் தொலைக்கவேண்டும் என்று எண்ணங்கொண்டு குசிகரைக் காணச் சியவனர் வந்தார்; தாம் ஒரு பெரிய யாகம் செய்யப் போகிறதாகவும்; அதற்குக் குசிகரும் அவர் பத்தினியும் இடைவிடாது பணி

விடைகள் செய்துகொண் டிருக்கவேண்டும் என்ப தாகவும் கூறி, அரசனை அதற்கு இசையும்படிச் செய் தார். பிறகு சியவனர், அரசன் அரண்மனையிற் சென்று, ஒரு புறமாக ஒரு படுக்கையில் படுத்துக் கொண்டு, அரசனையும் அவர் மனைவியையும் தம் கால்களை விடாது பிடித்துக்கொண் டிருக்கவேண்டும் என்று ஏவி, கண்களை மூடிக்கொண்டு இருபத்தொரு நாள் அவ்வாறே படுத்துக்கிடந்தார். பிறகு அவர் எழுந் திருந்து, ஒன்றும் பேசாமல் சஞ்சரிக்கத் தொடங்கி னர். அரசனும் அவர் மனைவியும் இருபத்தொரு நாள் கிடந்த பட்டினியைக்கூடக் கவனியாமல், அவர் பின்னே போக, அவர் திடீரென மறைந்தார். 'கோபித் துக்கொண்டு எங்கே போய்விட்டாரோ' என்று பயந்து, அவ்விருவரும் தேடிவருகையில் ரிஷி முன் படுத்திருந்த இடத்திலேயே மறு புறமாக மாறிப்படுத் துத் தூங்கிக்கொண்டிருந்தார். அரசனும் அவர் மனை வியும் அவர் கால்களை முன்போல் பிடிக்கத் தொடங்கி னர். பின்னும் இருபத்தொருநாள் கழிந்ததும் எழுந்து ரிஷி நல்ல உணவுகளைக் கொண்டுவரும்படி உத்தரவு செய்தார். உணவுகள் வந்ததும், அவைகளை அரண் மனையிலிருந்த நல்ல துணிகளில் மூட்டைகளாகக் கட்டிக் குவித்து, நெருப்பு வைத்துவிட்டார். பின்பு தன்னை இரதத்தின்மேல் வைத்து, நகரத்தைச் சுற்றி இழுத்துக்கொண்டு வரும்படி அவ்விருவரையும் ஆக் ஞாபித்தார். அவ்வாறே வலம்வரும் வழியில், பார்ப்ப வர் பரிதபிக்கும்படி பட்டினியாய்க் கிடந்த அவர்களை, அவர் இரக்கமின்றிக் குறடாவால் அடிக்கத் தொடங் கினர். அரண்மனை வந்ததும், பொக்கிஷ சாலையைச்

குறையிட்டுக் கங்கைக்கரை வந்துசேர்ந்தார். அரசனும் அவர் பத்தினியும் மனம் தளராது, பின்தொடர்ந்து சென்றார்கள். அவர்களின் சாந்தநிலையை நோக்கிய ரிஷிக்கு முடிவில் சந்தோஷம் உண்டாக, அவர்கள் தேகத்தைத் தம் கையால் தடவிக்கொடுத்தார். உடனே மேலேயிருந்த காயங்கள் ஆறின. "நீங்கள் சுகமாக நகரம்போய்ப் பாரணைசெய்து, மறுநாள் இங்கு வாருங்கள்" என்று கட்டளையிட்டார். அரசனும் அவர் மனைவியும் குறிப்பிட்ட இடத்தில் மறுநாள் வந்துபார்க்க, அங்கு ஒரு பெரிய பட்டணமும், அழகிய கோட்டை முதலியனவும் காணப்பட்டன. அவர்கள் அவற்றைக்கண்டு வியந்துகொண் டிருக்கையில், அத்தோற்றங்கள் மறைய, திடீரென்று சியவனர் வெளிப்பட்டு அவர்களை நோக்கி, "சபிக்கவேண்டுமென்று சங்கற்பம் செய்துகொண்டு வந்த எனக்கு, உங்கள் சிறந்த பொறுமையால் அவ்வாறு செய்ய இடமில்லாமல் போய்விட்டது. உங்கள் பொறுமையைக் கண்டால் உங்கள் குலம் கூடிய சீக்கிரத்தில் உயர்ந்து, பிராமண குலமாகிவிடும் என்று தோற்றுகிறது. அது அப்படியே ஆகக் கடவது" என்று அனுக்கிரகித்து மறைந்தார்.

இம்மாதிரியே, துர்வாஸ மஹரிஷியைக் கண்ணபிரானும் உருக்குமிணியும் மிகுந்த பொறுமையுடன் ஆராதித்து, முடிவில் அவருக்காகச் செய்துவைத்திருந்த பாயஸத்தை அவர் உத்திரவின்படி மேலெல்லாம் பூசிக்கொண்டு மிகுந்த பரிசுத்தரானார்கள்.

**பொறுமையுடையோர் சிறுமை யடையார்.**

**—மஹாபாரதம், அனுசாஸன பர்வம்.**

---

## 26. தீர்க்காலோசனே

எக்காரியத்தைச் செய்தாலும், தீர்க்காலோசனே செய்வதையே கைக்கொண்டவரான ஒரு மஹரிஷி இருந்தார். இதனல் அவருக்குச் சிரகாரி என்னும் பெயர் வழங்கலாயிற்று. ஒருகாலத்தில், அவர் தாய் செய்த ஒரு குற்றத்திற்காக, அவர் தகப்பனர் மிகுந்த கோபாவேசங்கொண்டு, அவள் கழுத்தை வெட்டி விடும்படி சிரகாரிக்கு உத்தரவுசெய்து, அங்கு நிற்க மனமில்லாதவராய்க் காட்டிற்குப் புறப்பட்டுவிட்டார். சிரகாரி இந்த விஷயத்தில் சிலகாலம் மனத்தைச் செலுத்தி நன்ருய் ஆலோசித்தார். அவர் மனம் தாயைக் கொல்லத் துணியவில்லே. காட்டுக்குட் பிரவேசித்ததும், அவர் தகப்பனருக்குக் கோபம் சாந்தமாகிவிட, அவருக்கு தம் பிள்ளேக்கு இட்ட கட்டளே ஞாபகம் வந்தது. தம் பிள்ளே எங்கே தம் கட்டளேப்படி நிறைவேற்றிவிடுகிருனே என்று பயந்து பரபரப்புத் தோன்றி, மிகுந்த குழப்பத்துடன் வீட்டிற்கு அதிகவேகமாகத் திரும்பிவந்து, பிள்ளேயை விசாரித்தார். அக்கட்டளேயைக் குறித்துத் தாம் தீர்க்கமாக ஆலோசித்துக் கொண்டிருந்ததாகவும், என்ன யோசித்தும் தம் மனம் அந்தக் கட்டளேப்படி நடக்க இன்னும் துணியவில்லே என்பதாகவும் சிரகாரி மறுமொழி கூறினர். இதைக் கேட்டதும், தகப்பனரது மனம் குளிர்ந்தது. "நீ தீர்க்காலோசனே செய்து கொண்டிருந்ததனலன்ருே எனக்குப் பெரிய ஆபத்து வராமல் தடைபட்டது. உன் புத்தியே புத்தி" என்று தம் புத்திரன் குணத்தைத் தகப்பனர் மிகவும் புகழ்ந்து

பேசினர். நிர்க்காலோசனைதான் பாபதிதினின்றும் மனிதனை எளிதில் காக்கும் திறனுடையது.

எண்ணித் துணிக கருமம்.

—மஹாபாரதம், அநுசாஸன பர்வம்.

---

## 27. துன்பம் கண்டு இரங்கல், (1)

சூரிய வம்சத்து அரசனான **தசரதர்**, ஒருநாள் வேட்டையாடக் காட்டின் வழியே போய்க்கொண்டிருக்கையில் மாலை நேரம் வந்தது. அப்பொழுது கொஞ்ச தூரத்தில் ஏதோ ஒரு மிருகம் தண்ணீர் குடிப்பது போன்ற சப்தம் அவர் காதில் விழுந்தது. அச்சமயத்தில், அவர் கையில் சப்தவேதியென்ற ஒரு பாணம் இருந்தது. சப்தம் வரும் திசையை நோக்கி அதை விட்டால், அந்தப் பாணம், சப்தம் உண்டாக்கிய பிராணி மறைவில் இருந்தாலுங்கூட, அதையடைந்து அடிக்கும் சக்தியையுடையது. இந்தப் பாணத்தைத் தசரதர் இதுவரையிலும் உபயோகித்துப் பார்த்ததில்லை. முற்கூறிய சப்தம் அவர் காதில்விழுந்ததும், முன்பின் யோசிக்காமல், அவர் அந்தப் பாணத்தைப் பிரயோகித்துவிட்டார். கொஞ்ச நாழிகைக்கெல்லாம், ஒரு மனிதனது அழுகைக் குரல் அவர் காதில் விழுந்தது. "மிருகம் என்று எண்ணி மனிதனை அடித்துவிட்டோமோ!" என்று அவர் நடுநடுங்கி, சப்தம் வந்தவிடம் போய் நோக்க, அங்கு ஒரு ரிஷி குமாரன் தண்ணீரில் அமிழ்த்தப் பெற்றிருந்த ஒரு குடத்தைப் பிடித்தவண்ணமாக அம்பு பாய்ந்து அவஸ்தைப் படுவதைக் கண்டார். உடனே மிகுந்த துக்கத்துடன், "நான் அறியாமற் செய்த குற்றத்தை

மன்னிக்கவேண்டும்" என்று அந்த ரிஷிகுமாரனை அவர் கேட்க அவன், "நான் என் பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளை; அவர்களோ குருடர்கள் ; தாகத்திற்கு என்னைத் தண்ணீர் கொண்டுவரும்படி அனுப்பினார்கள். எனக்கோ இந்த ஆபத்து நேர்ந்துவிட்டது. நீயும் தருமாத்மாவாயிருப்பதால், இது என் கர்மபலனே என்று நினைக்கத்தக்கதாக இருக்கிறது. ஆதலால், இந்தக் குடத்து நீரை என் பெற்றோர்களிடம் கொடுத்து எனக்கு நேர்ந்த ஆபத்தையும் கூறுங்கள்" என்று சொல்லி உயிர்விட்டான். அரசன் அப்படியே போகாமல், இறந்தவனைத் தம் தோளில் போட்டுக்கொண்டு, கையில் குடத்துடன் அவன் தாய் தந்தையராகிய குருடரிடம் போய், அவர்களுக்குத் தமது பிள்ளையின் மேலிருந்த ஆவலைக் கண்டு மனம் பதைத்து மிகுந்த துக்கத்துடன் நடந்ததை ஒளியாது கூறி, அவர்கள் கொடுக்கும் சாபத்தைப் பெற்றுக் கொள்ளத் தயாராக மிகுந்த விநயத்துடன் நின்றான். அரசனது மனநிலையை யுணர்ந்த மஹாரிஷி, "நீயோ பரிசுத்தன். ஏதோ காலபலத்தால் இம்மாதிரிச் செய்யும்படி நேர்ந்தது. ஆதலால், உனக்கு நாங்கள் யாதொரு சாபமும் கொடுக்கப் போவதில்லை. ஆயினும், உன் மரண காலத்தில் புத்திரசோகம் இன்னதென்று உணர்ந்து நீ மரிப்பாய்" என்று கூறி அதனால் அவர்களும் இறந்தார்கள்.

**துன்பம் கண்டிரங்கில் பாபம் நீங்கும்.**

**—இராமாயணம், அயோத்தியா காண்டம்.**

---

## 28. துன்பம் கண்டு இரங்கல் (2)

தனது சேனைகளெல்லாம் இராமரது வானரப் படைகளால் சின்னாபின்னப்பட்டுச் சிதறி ஓடுவதை ஒருநாள் இராவணன் கண்டு, அவர்களுக்குத் தைரியம் உண்டாக்கக் கருதி, தானே இராமரை எதிர்த்துச் சண்டைசெய்யப் புறப்பட்டான். இராமரோடு அவன் வெகுநேரம் சமயுத்தம் செய்து, முடிவில் அவரது பாணங்களால் வில் அம்பு முதலியவைகளை இழந்து, அன்று மாலை அவர்முன்பு நிராயுதபாணியாகித் தவித்துநின்றான். அப்பொழுது இராமர், "இவன் பெரிய தீரனான ஓர் அரசன்; சண்டை செய்தவரையில் முன்வைத்த கால் பின்வைக்காது, க்ஷத்திரிய தருமப்படியே போர்புரிந்து வந்தான். இப்பொழுது ஏதோ கால வித்தியாஸத்தால் தோல்வியடைந்தான். இந்த அபாய சமயத்தில், செத்த பாம்பை யடிப்பதுபோல் இவனைக் கொல்வது தருமமன்று" என்று எண்ணிக் கொண்டு, இராவணனது துன்பத்தைக்கண்டு இரங்கி அவனை நோக்கி, "நீ செய்ததோ துஷ்ட காரியம். ஆனாலும், உன்னிடத்தில் சிறந்த க்ஷத்திரிய தருமம் காணப்படுகிறது. ஆதலால் உன்னை இந்தச் சமயத்தில் கொல்ல எனக்கு மனம் வரவில்லை. உன்னைக் கொன்று தீரவேண்டும் என்பதும் எனது நோக்கம் அன்று. சீதையை மீட்டுக்கொள்ள வேண்டுமென்பதே என் எண்ணம். ஆதலால், உன்னை இப்பொழுது கொல்லாமல் விடுகின்றேன்; இன்றிரவு முழுவதும் தீர்க்காலோசனை செய்து, சீதையை நாளையாவது என்னிடம் கொண்டுவந்து விட்டு விடுவாயாகில், இவ்வளவோடு சண்டையை நிறுத்தி விடுகிறேன். நீ போய் வா"

என்று கூறி, இராவணனை அனுப்பிவிட்டார். இராமரது புத்திமதியைக் கேட்டுச் செல்லும் இராவணனுக்கு அவர் நற்குணத்தால் மனங்கரைய, சீதையைத் திருப்பிக் கொடுத்துவிடலாம் என்னும் அறிவு தோன்றிற்று. அரண்மனை சென்றதும், அவைகளெல்லாம் முற்றிலும் மறந்துபோக, அவன் இராமரிடம் முன்போலப் பகைபாராட்டத் தொடங்கினன். பிறகு அவன் இராமபாணத்திற்கு இரையானன்.

**இரக்கம் விரோதிகளையும் கனிவிக்கும்.**

**—இராமாயணம், யுத்த காண்டம்.**

---

## 29. ஜீவகாருண்யம்

முற்காலத்தில் சிபி என்ற ஓர் அரசன் இருந்தான். அவன் மனுநெறிதவருது அரசுபுரிந்துவந்தான். ஒரு நாள் அவன் தன் உத்தியானவனத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அங்குள்ள சிருஷ்டி விநோதங்களைக் கண்டு மெய்ம்மறந்து, சிருஷ்டி கர்த்தாவினிடம் தன் மனதைச் செலுத்துங்காலத்தில், ஒரு வல்லூறு பக்ஷியினல் துரத்தப்பட்ட ஒரு மாடப்புரு, பறந்து வந்துசேர்ந்து அவன் மடியில் விழுந்தது. வல்லூறுக்குப் பயந்து, அது தன்னிடம் சரணம் புகுந்தது என்றே அரசனுக்குத் தோன்றிற்று. உடனே பின் தொடர்ந்துவந்த வல்லூறை, மாடப்புருவின் அருகில் வரவொட்டாது சிபி தடுத்துவிட்டான். அப்பொழுது வல்லூறு மனிதக்குரலினல், “எனக்கு இயற்கையாக இரையாய் ஏற்பட்ட இந்த ஜந்துவை நான் தொடக் கூடாதென்று தடுப்பது நியாயமோ?” என்று ஆக்ஷேபித்தது. புருவையும் காப்பாற்றி, வல்லூறுக்கும் நியா

பம் பகரவேண்டிய அரசன், புறாவின் நிறை எவ்வள வோ அவ்வளவு தன் தேகத்திலுள்ள மாமிசத்தைக் கொடுப்பதாக வல்லூறுக்கு வாக்களித்தான். அதற்கு வல்லூறு இசைய, அரசன் ஒரு பெரிய தராசைக் கொண்டுவரச் செய்து அதன் ஒரு தட்டில் புறாவை வைத்து மற்றொரு தட்டில் தன் தொடையிலிருந்து கொஞ்சம் மாமிசத்தை அறுத்து வைத்தான். புறா கன மாக இருந்தது. அதற்கும் மனம் வருந்தாது மிகுந்த சந்தோஷத்துடன் சிபி தனது மாமிசத்தைக்கொஞ்சம் கொஞ்சமாக அறுத்து வைத்தான். எவ்விதம் செய் தும், புறா இருந்த தட்டு கனமாகவே தாழ்ந்திருந்தது. சிபி சற்று யோசித்து, ஜீவகாருண்யத்தால் தூண்டப் பட்டு, தானே அந்தத் தராசில் ஏறினன். இந்த ஜீவகா ருண்ய முயற்சியைக் கண்டதும், வல்லூறும் புறாவும் தமது நிஜரூபமாகிய தேவ உருவத்தைக் காட்டிச் சிபி யின் ஜீவகாருண்யத்தைப் பற்றி மிகப் புகழ்ந்துபேசி, சிபிக்கு முன் நிலைமையும், தீர்க்காயுளும் சிறந்த செல்வமுமுண்டாகுமாறு அனுக்கிரகித்து மறைந்தன.

'மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற் கில்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை'

—மஹாபாரதம், ஆரண்ய பர்வம்.

---

## 30. விடாமுயற்சி (1)

சூரியவம்சத்தில் சகரனென்று ஓர் அரசன் இருந் தான். அவன் அசுவமேதயாகம் செய்ய எண்ணி உல கத்தை வலம்வரும்படி ஒரு சிறந்த குதிரையைத் தக்க காவலுடன் விட்டான். அதை இந்திரன் பிடித்துப் பாதாள உலகத்தில் தவம் செய்துகொண்டிருந்த கபில




சாவித்திரி யமனைச் சந்தித்தல்.

—25-ம் பக்கம் பார்க்க.




நளன் தமயந்தியைக் காட்டில் பிரிதல்.

—28-ம் பக்கம் பார்க்க.

ரிஷியின் அருகில், ஒரு மரத்தில் கட்டி வைத்து விட்டான். சகரன் அந்தக் குதிரையைத் தேடிப்பார்த்துக் கண்டுபிடிக்கும்படி தனது அறுபதினுயிரம் (60,000) பிள்ளைகளையும் அனுப்பினுன். அவர்கள் அநேக இடங்களில் சுற்றித் திரிந்து, முடிவில் குதிரை இருக்குமிடம் வந்துசேர்ந்து, குதிரையைக் கண்டனர். கண்டவுடனே, கபிலவாஸுதேவரே இந்தத் திருட்டுக்குக் காரணம் என்று நினைத்து, சகர புத்திரர்கள் அவர் தவத்தைக் கலைக்கத் தொடங்கினுர்கள். அப்பொழுது அவர் கோபத்துடன் விழித்து நோக்க, அவர்கள் எல்லோரும் சாம்பராய் விட்டனர். சகர வம்சத்தில் ஐந்தாம் தலைமுறையில் உதித்த பகிரதன் என்பவன், இந்த விருத்தாந்தத்தைக் கேள்வியுற்றுத் தமது மூதாதைகள் நற்கதி அடையும்பொருட்டு வெகுகாலம்தவஞ் செய்தான். முடிவில், கங்காநதி ஜலத்தைக்கொண்டு அவர்களது சாம்பலின்மேற் பாயும்படி செய்யவேண்டுமென்று பிரமதேவனுல் அறிந்து, இடைவிடாத பக்தி சிரத்தையுடன் கங்கையையும், பரமசிவனையும் வெகு காலம் ஆராதித்துவந்தான்: பல சமயங்களில் அவன் மனம் குழம்பித் தத்தளித்தது. அவனுக்குத் தடைகள் அநேகம் உண்டாயின. அப்படியிருந்தும், தான் கொண்ட விரதத்தை விடாது அனுஷ்டித்துவந்தான். முடிவில் அவன் விடாமுயற்சியைக் கண்டு தேவர்கள் மிகவும் சந்தோஷித்து, அதற்காக திருமூர்த்திகளை வேண்ட, அவர்கள் வேண்டுகோளின்படி திருமூர்த்திகள் பகிரதனுக்கு அனுக்கிரகம் செய்தார்கள். உடனே சுவர்க்கலோகத்திலிருந்து கங்கை இறங்கிவந்து, சகரர் சாம்பரின் மேற் பாய்ந்து ஓடிற்று. பகிரதன் பிரார்த்

தனையும் நிறைவேற்று. பகீரதப் பிரயத்தனம் என்பது விடாமுயற்சி என்ற பொருளில் வழங்கிவருவது யாவரும் அறிந்ததே யாகும்.

முயற்சியுடையோர் இகழ்ச்சியடையார்.

—இராமாயணம், பாலகாண்டம்.

---

## 31. விடாமுயற்சி (2)

முற்காலத்தில் உத்தானபாதன் என்ற ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு சுநீதி, சுருசி என்று மனைவிகள் இருவருண்டு. சுருசிக்கு உத்தமன் என்ற பிள்ளையும், சுநீதிக்கு துருவன் என்ற பிள்ளையும் பிறந்தனர். ஒரு நாள் தகப்பன் மடியில் உத்தமன் உட்கார்ந்து கொண்டிருக்க, சுருசி அருகில் நின்று உல்லாசமாக அரசனுடன் பேசிக் கொண்டிருந்தாள். அரசனால் கவனிக்கப்படாமல் விடப்பட்ட சுநீதியின் பிள்ளையாகிய துருவன் அங்குத் தற்செயலாய்ச் சென்று, தானும் தன் தகப்பன் மடியில் உட்காரவேண்டும் என்று மிகுந்த ஆவலுடன் அரசன் மடிமேல் ஏற வந்தான். அதைக்கண்ட சுருசி மிகுந்த கோபங்கொண்டு "உன் சகோதரன் உத்தமனே இராஜ்யத்துக்கு உரியவன்; அவனைப்போல் நீயும் ஆகவேண்டுமென்றால், நீ என் வயிற்றில் வந்து பிறக்கத் தவஞ்செய்ய வேண்டும்" என்று கூறி, துருவனை அடித்து இழுத்துத் தூரத்தில் தள்ளிவிட்டாள். இந்தக் கொடிய நடத்தையால் அடங்காத் துக்கமுற்ற அச்சிறுவன், தாயினிடம் ஓடிவந்து அழுது, தனக்கு நேரிட்ட அவமரியாதையைச் சொல்லிக் கதறினன். சுநீதி இந்த விஷயங்களையெல்லாம் கேட்டதும், மகனைப் பார்த்து, "நாம்

விதிக்கு உட்பட்டு இருத்தல் வேண்டும்; முடியா தென்றால் விதி நம்மை விடுமா? மேலான பதவி வேண்டுமாகில், பகவானை ஆராதிக்க வேண்டும்" என்று சொல்லித் தேற்றினாள். தாய் கூறிய விவேக வார்த்தையை உறுதியாகப் பிடித்துக்கொண்டு, துரு வன் தாயினிடம் விடைபெற்றுத் தவம் செய்ய வனம் சென்றான். போகும் வழியில் எதிர்ப்பட்ட நாரதர், அவனை எவ்விதத்திலாவது ஊருக்குத் திருப்பவேண்டு மென்று முயன்றும், முடியாதது கண்டு, மஹாவிஷ் ணுவைத் தியானம் செய்யும் விதத்தை நன்றாக எடுத்து அவனுக்கு உபதேசித்தார். அவனும் நாரதர் கூறிய படி மிகக் கடுமையான தவங்களைச் சற்றேறக்குறைய ஆறுமாத காலம்வரை செய்து, இடைவிடாது கடவு ளைத் தியானித்து வந்தான். அந்த நிலையிலிருந்து அவனைக் கலைக்க அநேகம் தடைகள் ஏற்பட்டன. துருவன் மன உறுதியோடு தன் தவத்திலேயே கண் ணாயிருந்தான். முடிவில் பகவான் அவனுக்குப் பிரத்தி யக்ஷமாகி, அவன் விரும்பிய வண்ணம் இம்மையில் விசேஷமான சுகங்களைக் கொடுத்து, முடிவில் தமது உலோகம் வந்துசேரும்படி அனுக்கிரகித்தார்.

முயற்சி திருவினை யாக்கும்.

—பாகவதம். 4-வது ஸ்கந்தம்.

---

## 32. விடாமுயற்சி (3)

சூரியவம்சத்தில் காதி என்ற ஓர் அரசன் இருந் தான். அவனுக்குக் கௌசிகன் என்ற ஓர் ஆண் பிள்ளை பிறந்தான். அவன் அரசாண்டுவந்த நாளில்

வசிஷ்ட மஹரிஷியுடன் ஒரு விஷயமாகச் சண்டை யிடும்படி நேர்ந்தது. அதில் அவன் தன் பராக்கிரமம் முழுவதையும் காட்டி, அவரை ஜயிக்க முயன்றான். கௌசிகன் பராக்கிரமமெல்லாம் வசிஷ்டரது பிரம தண்டத்தின்முன் பயன்படாமற் போய்விட்டது. அப்பொழுது கௌசிகன் தோல்வியடைந்து, க்ஷத்திரிய பலத்தை நிந்தனை செய்து, "பிரம தேஜஸின் பலமே பலம்" என்று வியந்துகூறி, இராஜ்யத்துக்குத் திரும்பிப் போகாமல், அப்படியே பிராம்மண்யம் சம்பாதிக்க, தெற்குத் திக்கை நோக்கிச் சென்றான். அங்கு வெகுகாலம் தவம் செய்து, பிரமதேவனால் கொடுக்கப்பட்ட ராஜரிஷிப் பதவியை யடைந்தான். அங்கும் தன் விருப்பம் நிறைவேறாதது கண்டு, கௌசிகன் மறுபடியும் அதிக ஊக்கத்துடன் தவஞ் செய்யத் தொடங்கினன்.

இப்படியிருக்கையில், தன் குலகுருவாகிய வசிஷ்டர் கட்டளையை மீறிவந்த திரிசங்குவைச் சுவர்க்க மேற்றும் விஷயத்தில் அவர் தவம் வீணாய்விட்டது. அதைப்பற்றித் துக்கித்த கௌசிகரும், 'இனி இங்கு இருந்தால் உபயோகமில்லை' என்று நினைத்து மேற்குத் திக்குச் சென்று, வெகுகாலம் தவம் செய்தார். அங்கு யாகத்திற்குப் பசுவாகக் கொண்டுபோகப்பட்ட தம் மருமகனான சுனச்சேபன் உயிர்பிழைக்கும்பொருட்டு, அவர் தவம் நல்ல வழியில் உபயோகப் படுத்தப்பட்டது. அப்படியிருந்தும், அவர் தம் தவம் பிராம்மண்யம் சம்பாதிப்பதில் உதவியாகாமல் போனதால், மறுபடியும் தவஞ்செய்யத்தொடங்கினர். இம்முறைசெய்ய முயன்ற தவம், இந்திரனால் ஏவப்பட்ட மேனகையால்

கலங்கப்பட்டது. அப்பொழுது அவருக்குச் சகுந்தலை என்று ஒரு பெண் பிறந்தாள். இவ்வாறு தவம் வீணானது கண்டு, கௌசிகர் மனம் தளராமல் வடக்குத் திக்கை நோக்கிச் சென்று வெகுகாலம் அங்குத் தவஞ் செய்யவே, பிரமதேவன் பிரத்தியக்ஷமாகி, "உனக்கு இருக்கிற இந்திரிய ஜயம் போதாது; பிராம்மண்யம் வேண்டுமானால், இன்னும் உனக்குச் சிறந்த குணங்கள் வரவேண்டும். மேலும் தவம் செய்" என்று கட்டளையிட்டார். இவ்வாறு கட்டளையிடப்பட்ட கௌசிகர், மனம் தளராது கடுமையான தவம் செய்தார். இப்படித் தவஞ் செய்கையில், இவர் தவத்தைக் கெடுக்க இந்திரனால் அனுப்பப்பட்ட ரம்பை அவரது எதிரில் வந்தாள். அவள் வந்ததும், ரிஷி விழித்து நோக்கி மிகுந்த கோபத்துடன், "நீ கல்லாய்ப் போகக் கடவாய்" என்று சபித்தார். அதனால் அவருடைய தவம் குறைந்து போயிற்று. அவருக்கு அப்பொழுது தான் கோபத்தால் விளையுங்கேடு புலப்பட்டது. உடனே அவர் வடக்குத் திக்கை விட்டுக் கிழக்குத் திக்கை நோக்கிச் சென்று மிகுந்த சாந்தத்துடன் வெகுகாலம் தவஞ்செய்தார். தவத்தின் முடிவில் பிரமதேவன் பிரத்தியக்ஷமாகி, "வாராய் பிரமரிஷியே!" என்றழைத்தார். அப்பொழுது விசுவாமித்திரர், (கௌசிகனுக்கு மற்றொரு பெயர்) "நான் இவ்வாறு விடாமுயற்சி செய்து பிராம்மண்யத்தை அடைவதற்குக் காரணராயிருந்த பிராமண சிரேஷ்டராகிய வசிஷ்டரே, என்னைப் பிரமரிஷி என்று அழைத்துக் கௌரவப்படுத்த வேண்டும்" என்று வேண்டிக்கொள்ள பிரம்மா அவ்வாறே செய்வித்தார். வசிஷ்டருக்கும்

விசுவாமித்திரருக்கும் நேரிட்டிருந்த விரோதமெல்லாம் அன்றோடே நீங்கிற்று.

**விடாமுயற்சியால் ஆகாதது ஒன்றும் இல்லை.**

**—இராமாயணம், பாலகாண்டம்.**

---

## 33. மாறு விசுவாசம்

சூரிய புத்திரனை சுக்கிரீவன் வானரர்களை ஆண்டுகொண்டு, கிஷ்கிந்தைக்கு அதிபதியாயிருக்கையில், அனுமார் அவனுக்கு மந்திரியாயிருந்தார். இவர் சுக்கிரீவனுக்கு அத்தியந்த நண்பராய், அவனை எப்பொழுதும் பின்பற்றி, வாலியினால் அவன் துரத்தப்பட்டு ஓடி ஒளிந்தவிடமெல்லாம் தாமும் சென்று கஷ்டப்பட்டவர். முடிவில் சுக்கிரீவன் ரிசியமூக பர்வதம் சென்று ஒளித்துக்கொண்டான். அவன் ராஜ்யமிழந்து ஓடித்திரிந்த காலமெல்லாம் அவனோடு அனுமாரும் மிகுந்த விசுவாசத்துடன் சென்று, அவன் அரசனாய் இருக்குங்கால் எவ்வித மரியாதையும் கௌரவத்தையும் அவனிடம் வைத்திருந்தாரோ அப்படியே வைத்திருந்தார். சீதா தேவியைத் தேடிக்கொண்டு இராம லக்ஷ்மணர்கள் அம்மலையினருகில் வந்தபொழுது, இந்த விசுவாசமுள்ள அனுமாரே, சுக்கிரீவனுக்கும் அவர்களுக்கும் சிநேகத்தை உண்டாக்கி வைத்தார். அதுமுதல் அனுமார் இராமபக்தனாகி, மிகச் சிறப்படைந்தார். விசுவாச விஷயத்தில் அனுமார் பெயர் இன்றும் ஒரு பழமொழியாக வழங்கிவருகிறது.

**ஆபத்தில் உதவுபவனே அருமைத்தோழன்.**

**—இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம்.**

---

### 34. நன்றியறிதல்

**கர்ணன்** என்னும் புகழ்பெற்ற அரசன் குந்தி தேவியின் மூத்தபிள்ளை. அவன் தன் வாலிபம் முதற் கொண்டே கௌரவர்களுள் மூத்தவனாகிய துரியோதனனுக்குச் சிநேகமாகி, அவன் சார்பிலேயே இருந்தான். குருபாண்டவ யுத்தம் தொடங்கிய காலத்தில், இவனைக் கௌரவர்களுடைய பக்கத்தை விட்டுவிடும்படி ஸ்ரீ கிருஷ்ணபகவானும், குந்திதேவியும் தம்மால் இயன்றவரை கெஞ்சிக் கேட்டனர்; தாங்கள் கேட்டுக் கொண்டபடி செய்தால், அவனுக்குக் கௌரவ ராஜ்யமும் பாண்டவரின் பணிவிடையும் எளிதில் கிடைக்குமெனவும் எடுத்துக் கூறினர். ஆயினும் கர்ணன், துரியோதனனுடைய உணவினால் வளர்ந்தவனானதால், பாண்டவர்களது சிறப்பை உணர்ந்தும், தன்னயத்திற்காகத் துரியோதனன் கட்சியை விடமாட்டேனென்று கூறிவிட்டான். தன் தோழனுக்குத் துரோகம் செய்வதைக் காட்டிலும், தன் பிராணனை விட்டுவிடுவதே மேன்மையென்று அவன் நினைத்தான். அதன்படி அவன் முடிவுவரையில் கௌரவர்களிடம் விசுவாசம் வைத்துத் தன்னால் இயன்றமட்டும் சண்டைசெய்து அவர்களுக்காகத் தன் உயிரையுங் கொடுத்தான்.

**உப்பைத் தின்றால் உழைத்தே தீரவேண்டும்.**

**—மஹாபாரதம், உத்தியோக பர்வம்.**

---

### 35. மெய் நட்பு

கிருஷ்ணபகவான் **சாந்தீபினி** மஹரிஷியிடம் குருகுல வாசம் செய்துவந்த நாளில், அவரோடு **ஸுதாமா** என்னும் பிராமணச் சிறுவர் கல்வி கற்று

வந்தார். அப்பொழுதே இவ்விருவருக்கும் மிகுந்த சிநேகம் ஏற்பட்டது. இருவரும் சமமாகப் பழகிவந்தனர். இவ்விதம் சில காலம் கல்வி கற்றபிறகு, கிருஷ்ணபகவான் குருதட்சணையளித்துவிட்டு, துவாரகைக்குச் சென்றனர். ஸுதாமாவும் தம்மாலியன்ற குருதட்சணை யளித்து, ஒரு பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டு, கிருகஸ்தாசிரமத்தில் அமர்ந்தனர். அதுமுதல் அவரைத் தரித்திரம் பிடிக்கத் தொடங்கிற்று. இவ்வாறிருக்கையில், அவருக்கு இருபத்தேழு பிள்ளைகள் உண்டாயின. உடுக்கக்கூட வஸ்திரமின்றி ஒரு கந்தைத் துணியை அவர் உடுத்திக்கொண்டு காலங்கழித்து வந்தார். அதனால் அவருக்குக் குசேலர் என்ற பெயரும் உண்டாயிற்று. இவ்வளவு கஷ்டம் நேரிட்டபோதிலும், அவர் இதை ஒரு பொருட்டாக நினையாது, பகவத்தியானத்தில் மூழ்கியிருந்து அவசியமான வேளைகளில் குடும்ப ரக்ஷணைத்துக்கு வேண்டிய பிக்ஷை எடுத்துக்கொண்டு, காலம் கழித்துவந்தார். அவர் மனைவியும் வந்ததை வைத்துக்கொண்டு திருப்தியடைந்து, கணவனுக்கு யாதொரு கஷ்டமும் தோன்றாதபடி நடந்துவந்தாள். இப்படியிருக்கையில், குழந்தைகளின் தொந்தரவு அதிகமாக, ஒரு நாள் அவர் மனைவி குசேலரிடம் வந்து, குடும்ப நிலைமை எடுத்துக் கூறி, "இவ்வாறு எவ்வளவு நாள் பிக்ஷை எடுத்துக் காலந் தள்ளுவது? உங்களுக்குக் கிருஷ்ணன் பால்ய சிநேகம் என்று சொல்லியிருக்கிறீர்களே; அவரிடம் சென்று, இந்தத் தரித்திரத்தைத் தீர்த்துக்கொள்ள வழி தேடினால், உங்கள் பகவத் தியானத்திற்குக் கூட இம்மாதிரியான தடைகள் ஏற்படமாட்டாதே"

என்று விண்ணப்பம் செய்துகொண்டாள். குசேலர் தரித்திரத்தால் விளையும் நன்மையையும், சம்பத்தால் விளையும் தீமையையும் எடுத்துக்கூறி, முடிவில் அவள் இஷ்டப்படியே பகவானிடம் சென்று சம்பத்தைப் பெற்றுவருவதாகவும், அதற்குப் பதிலாக அவள் பகவானை மறவாதிருக்கவேண்டியது என்பதாகவும் கூறி, பகவானைக் காணக் காணிக்கையாக அவர் அவளிடமிருந்து மூன்றுபிடி அவலை வாங்கிக்கொண்டு, துவாரகை நோக்கிப் புறப்பட்டார். அங்கே சென்றதும் பகவானைக் காணக்கூடாமல் தவித்து, பிறகு வெகு பிரயாசைப்பட்டு, பகவான் உருக்குமணி சமேதராய் எழுந்தருளியிருந்த அந்தப்புரம் போயினர். பகவானும் அவரைக் கண்டு உடனே எழுந்து, ஓட்டமாக ஓடிவந்து அவரை மார்புறத்தழுவி, பால்யசிநேகமுறையில் நடந்த விஷயங்களை வெகு அன்புடன் எடுத்துரைத்து, மிகுந்த ஆதரவுடன் அவரைத் தாம் உட்கார்ந்திருந்த ஆசனத்தில் உட்கார வைத்தார். அதனோடு நில்லாமல், அவருக்கு ஆசார உபசாராதிகளும் செய்து, தமக்கு மேலாகவும் அவரை மதித்துவந்தார். பின்பு அவர் அன்புடன் கொண்டுவந்திருந்த அவலை வாங்கி, 'குசேலருக்கு மிகுந்த சம்பத்து உண்டாகக் கடவது' என்று திருவுளத்தில் நினைத்து, ஒரு பிடி எடுத்துத் தன் வாயில் போட்டுக்கொண்டார். உடனே குசேலர் வீட்டில் அஷ்ட ஐசுவரியங்களும் நிரம்பின. பிறகு மிகுந்த ஆதரவுடன் பகவான், அவரை வந்தபடியே ஊருக்கு அனுப்ப, அவர் ஊர் சேர்ந்து, அங்கே பகவத் கிருபையினாலுண்டான சம்பத்தைக் கண்டு வியந்தார். ஆனபோதிலும், அவர் அந்தச் சம்பத்தில் மூழ்கி

மயங்காது, பகவத் தியானத்தை விடாது செய்து கொண்டு, சுகமாய் வசித்திருந்தார்.

மெய்நட்பு எந்நிலையினும் மாறுதிருக்கும்.

—பாகவதம், பத்தாம் ஸ்கந்தம்.

---

## 36. ஸத்ஸங்க பலன்

நாரதர், முன்ஜன்மத்தில் நான்கு சாஸ்திரமறிந்த ஒரு பண்டிதர் வீட்டு வேலைக்காரியின் பிள்ளையாய் இருந்தார். அப்பண்டிதரின் வீட்டிற்குச் சில பாகவதர்கள் வந்து கொஞ்சகாலம் தங்கியிருந்தனர். அவர்களுக்குத் தொண்டு செய்யும்படி வேலைக்காரியின் பிள்ளையைப் பண்டிதர் நியமித்தார். இந்தப் பிள்ளை, அவர்கள் இட்ட வேலையை மிகுந்த சிரத்தையுடன் செய்துகொண்டும், அவர்களுடைய அநுஷ்டானம், பூசை முதலியவைகளை மிகுந்த ஆவலோடு பார்த்துக் கொண்டும், அவர்கள் உண்டு மிஞ்சிய உணவுகளை மிகுந்த பக்தியோடு புசித்துக்கொண்டும் தன் காலத்தைக் கழித்துவந்தான். அந்தச் சிறுவனது சிரத்தையைக் கண்ணுற்ற அம்மகான்கள், தாம் புண்ணிய தேச சஞ்சாரஞ் செய்யப் புறப்பட்டுப்போகையில் அவனைத் தமது அருகே அழைத்து, அவனுக்குப் பகவத் தியான வகைகளை உபதேசித்தனர். இச்சிறுவன் தன் தாயால் போஷிக்கப்பட்டு வருகையில், ஒருநாள் அவளைப் பாம்பு கடிக்க, அவள் இறந்தாள். அந்தத் துக்க சமயத்தில் அச்சிறுவனுக்கு மகான்கள் செய்த உபதேசம் ஞாபகத்தில் வர, அவன் ஒருவாறு தேறி, தான் மேன்மை யடைவதற்காக ஹிமாலயம் நோக்கிப் புறப்பட்டான். வழியில் களைப்பு அதிகரிக்க, அருகி




தத்தாத்ரேயர்.

34-ம் பக்கம் பார்க்க.

A = R = [illegible]




இராமர் பரதரைச் சந்தித்தல்.

—37-ம் பக்கம் பார்க்க.

விருந்த ஓர் ஏரியில் அவன் ஸ்நானஞ் செய்து, அங்கு நீரைக் கொஞ்சம் குடித்துக் களைப்பாறினான். உடனே அவன் அந்த ஏரிக்கரையில் மகான்கள் சொல்லிய படி பகவத் தியானம் செய்யத் தொடங்க, அவன் மன தில் பகவத்ரூபம் தோன்றி மறைந்தது. அதை நன்-ருகக் காணுவதற்கு இல்லையே யென்ற ஏக்கம் உண் டாக, அந்தச் சமயத்தில் ஆகாசவாணி, 'உனக்கு இந்த ஜன்மத்தில் இவ்வளவுதான் பகவத் தரிசனம் கிடைக் கும்; நீ விடாது பக்தி செய்துகொண்டிரு; இதைவிட மேலான பதவி உனக்கு அடுத்த ஜன்மத்தில் உண்டா கும்' என்று கூறி, அந்தச் சிறுவனைத் தேற்றிற்று. இதைக் கேட்டதும், அச்சிறுவன் அங்கிருந்து எழு ந்து, மிகுந்த சந்தோஷத்துடன் பகவத்பக்தி செய்து கொண்டும், மரணகாலம் எப்பொழுது சமீபிக்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டும் தேசசஞ்சாரஞ் செய்யத் தொடங்கினான். முடிவில் அவனுக்குத் திடீ ரென்று மரணம் சித்திக்க, அவனே அடுத்த ஜன்மத் தில் மஹா பக்த சிரோமணியாகிய நாரத மஹரிஷியா கப் பிரமாவினது சுவாஸத்திலிருந்தும் வெளிப்பட் டார்.

" நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லாற்சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று.

—பாகவதம், முதல் ஸ்கந்தம்.

———

# III. அதரும விஷயம்

## 37. அதருமத்தின் பலன்

விச்ரவஸ் என்று ஒரு சிறந்த மஹரிஷி இருந்தார். கேசி என்னும் ஒரு ராக்ஷஸப்பெண், தனக்கு மகா பராக்கிரமமுள்ள குழந்தைகள் உண்டாக வேண்டும் என்று அஸுர முஹூர்த்தத்தில் அவரிடம் வந்து யாசித்தாள். "இது அனுக்கிரகம் செய்யக் கூடிய சமயம் அன்று" என்று ரிஷி வெகு நேரம் சொல்லியும் கேளாமல், அவள் பிடிவாதஞ்செய்ய, கடைசியில் அவளுக்குக் குழந்தைகளுண்டாகும்படி அவர் அனுக்கிரகித்தார். அவளிடத்தில் உண்டானவர்களுள் இராவணன் மூத்தவன். அவன் பிரமதேவனைக்குறித்துக் கடுமையாகத் தவஞ்செய்து, சிறந்த வரங்களைப்பெற்று மஹா பலவானானான். அந்தக் கர்வத்தால் அவன் புத்தி அதருமத்திலேயே செல்லத் தொடங்கிற்று. முதலில் தகப்பனார் உத்திரவுக்கு மீறி, தன் தமையன் முறையிலிருந்த குபேரனோடு சண்டையிட்டு, அவனது புஷ்பக விமானத்தைப் பிடுங்கிக்கொண்டு, இலங்காபுரியிலிருந்து அவனைத் துரத்திவிட்டுத் தானே இலங்கைக்கு அரசனானான். அங்கிருந்து அவன் செய்த அதருமங்களுக்கு அளவே இல்லை. பரஸ்திரீகளை உபத்திரவித்தல், ரிஷிகளின் தவங்களை அழித்து அவர்களைக் கொல்லுதல், திக்குத் திக்காகச் சென்று அங்குள்ள அரசர்களைச் சண்டைக்கழைத்து அபஜயப்படுத்தல் முதலிய கொடுந் தொழில்களைச் செய்துவந்தான். அவனுக்கு வரபலத்தால் சென்றவிடமெல்லாம் ஜயமே கைகூடி வந்தது.

இதனுல் அவனுக்கு அதர்மகாரியங்களில் அதிக ஊக்கம் உண்டாயிற்று. அப்படியிருந்தும், சென்றவிடங்களிலெல்லாம் பெரியோர்களில் சிலர், அவன் உபத்திரவம் தாங்காது சபிக்க, அந்தச் சாப மூட்டைகள் அதிகரித்துக்கொண்டே வந்தன. இராவணன் இதைக் கவனியாது, மிகுந்த உற்சாகத்துடன் அதருமத்தில் முனைந்து வேலைசெய்பத் தொடங்க, அவன் பலம் அவனுக்குத் தெரியாமலே குறைந்துகொண்டு வந்தது. எங்கும் அதருமஞ்செய்து ஜயமடைந்துவந்த இராவணன் பரம்பொருளின் அவதாரமான இராமபிரான் விஷயத்திலும் அதருமஞ்செய்ய எண்ணி, அவரது தர்மபத்தினியாகிய சீதையை இலங்கைக்குத் தூக்கிவந்து அவர் கோபத்துக்கு ஆளானுன். தகுந்த சமயம் வாய்க்கவும் முன்பு பெரியோர்களால் கொடுக்கப்பட்ட சாபங்கள் வந்து கவிந்துகொண்டன. 'பல நாள் திருடன் ஒரு நாள் அகப்படுவான்' என்ற கதைபோல், அவன் இராம பாணத்திற்கு இரையாகிக் குடும்பத்தோடு நாசமடைந்தான்.

**அதருமம் தோடங்குங்கால் இன்பமாய்த் துன்பம் பயக்கும். —இராமாயணம், உத்தர காண்டம்.**

---

## 38. கோபத்தினுல் வரும் கேடு

சூரியவம்சத்தில் அம்பரீஷர் என்ற சக்கரவர்த்தி ஒருவர் இருந்தார். அவர் தமது இராஜ்யத்தை, நீதிதவருது ஆண்டுவந்ததோடு, இவ்வுலக விஷயங்கள் அநித்தியம் என்றுணர்ந்து, பகவத்தியானத்தில் மனதைச் செலுத்திவந்தார். அவர் மஹாவிஷ்ணுவையே தமது இஷ்டதேவதையாகப் பாவித்துவந்தார். அவர், துவா

தசியில் வந்த அதிதிகளுக்கு அன்னம் அளித்துவிட்டுப் பிறகுதான் தாம் பாரணை செய்வதாய்த் நிர்மானித்து, அதுபோல் வெகுகாலம் நடந்துவந்தார். ஒரு துவாதசி தினத்தில் அவர் போசனம் செய்யுந் தருணத்தில் துர்வாஸ மஹாரிஷி அவரிடம் வந்தார். அம்பரீஷர் அவரைப் போசனத்துக்கு வரும்படி அழைத்தார். உடனே அவர் யமுனு நதிக்கு ஸ்நானம் செய்யச் சென்ருர். அவர் வருவதற்கு வெகு நேரமானபடியால் பாரணைவேளை முடியுங்காலம் வந்துவிட்டது. "அகாலமாகிவிட்டதே. விரதம் தவறிவிடுமே; பாரணை செய்துவிட்டலோ அதிதிக்குமுன் புசித்த பாவம் வந்துவிடுமே" என்று நினைத்துத் தரும சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு வருந்தும் அம்பரீஷரை நோக்கி பிராமணர்கள், "பகவானுடைய அபிஷேக தீர்த்தத்தை இப்பொழுதே ஆசமனீயம் செய்துவிட்டால், துவாதசியில் பாரணைசெய்த பலன் வரும். அதிதிக்கு முன் சாப்பிட்ட பாபம் வராது; இவ்வாறு செய்வதே நலம்" என்று தருமத்தை எடுத்துரைத்தனர். அரசனும் அவ்வாறே செய்தார்.

ரிஷி யமுனையிலிருந்து வந்து, அரசன் ஆசமனீயம் செய்ததை அறிந்து, "தமக்கு முன் அரசன் புசித்து விட்டதுபற்றிக் கோபித்துக் கொண்டார். மேன்மேலும் அவரது கோபம் அதிகரிக்க, அவர் தமது சடையிலிருந்து சில உரோமங்களை எடுத்து அதை ஒரு பெரும் பூதமாகச் செய்து, அதை அரசனுடைய உயிரை வாங்கிவரும்படி விடுவித்தார். அம்பரீஷர் நிர்ப்பயமாகப் பகவான்மேல் பாரத்தைப்போட்டுத் தாம் இருந்த இடத்தைவிட்டு அசையாமலும், ஒன்றும்

பேசாமலும் இருந்துவிட்டார். அந்த ஆபத்து சமயத்தில் வஸுதேவரது ஸுதர்சன மென்னும் சக்கரம், பக்தனுன அம்பரீஷரைக் காக்க ஆகாயத்தினின்றும் இறங்கித் துர்வாஸருடைய சக்கரத்தை எரித்து விட்டு அவரையும் துரத்தத் தொடங்கிற்று. அவர் பயந்தோடி அநேக தேவர்களிடத்துச் சென்று சரணம் அடைந்தார். எல்லோரும் தம்மால் முடியாதென்று அவரை நிராகரித்துவிட்டார்கள். எங்குச் சென்றுலும் சக்கரமோ அவரைப் பின்தொடர்ந்தது. கடைசியாய்த் துர்வாஸர், மகாவிஷ்ணுவையே சரணம் அடைந்தார். அப்பொழுது அவர், "நான் எனது அடியார்கட்கு அடங்கினவன்; பக்த சிரோமணியான இவரைக் காக்க இச்சக்கரம் புறப்பட்டது. இதை என்னுல் தடுக்க முடியாது. உமக்கு அம்பரீஷனைத் தவிர வேறு கதி இல்லை; அவனிடமே போம்" என்று ஆக்ஞாபித்தார். ரிஷி மிகுந்த வெட்கத்துடன் அம்பரீஷரிடம் வந்து சரணம் அடைய, அவர் மிக்கப் பெருந்தன்மையுடன் ரிஷிக்கு அபயம் அளித்து, ஸுதர்சன சக்கரத்துக்கு வேண்டிய வந்தனை வழிபாடுகளைச் செய்து, "ரிஷியை ஒன்றும் செய்யாது விட்டுவிட வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். உடனே ஸுதர்சன சக்கரம் பகவானிடம் சென்றது. துர்வாஸரும் அபாயம் நீங்கியதைக் கண்டு ஒருவாறு தேறினுர்.

**கோபம் பெருங்கேடு விளைக்கும்.**

—பாகவதம், 9-ம் ஸ்கந்தம்.

---

## 39. கர்வத்தால் உண்டாகும் கேடு (1)

இலங்காபுரி மன்னனுகிய இராவணன், தான் சென்றவிடமெல்லாம் தனக்கு ஜயம்வருவதைக் கண்டு தனக்கு நிகரான பலவான் ஈசுவர சிருஷ்டியில் ஒருவனும் இல்லையென்று மிகுந்த கர்வங் கொண்டிருந்தான். இவ்வாறு இவன் இறுமாந்து திக்குவிஜயம் செய்து வருகையில், இவனது விமானம் கைலாஸ கிரிக்குமேல் நேராக வரும்பொழுது, திடீரென்று எப்பக்கமும் செல்லாமல் நின்றுவிட்டது. அப்போது இராவணன் இக்கைலாசகிரியால்தான் தன் விமானம் தடைபட்டதென்று அறிந்து, கர்வ மிகுதியால், "கைலாசகிரியைப் பெயர்த்து ஒரு புறம் எறிந்து விட்டு விமானத்தைச் செலுத்தவேண்டும்" என்று எண்ணினனே யொழிய, அங்கிருந்த பரமசிவத்தைப் பணிந்து விமானத்தை அம்மலையைச் சுற்றிப் பிரதக்ஷிணமாகக் கொண்டுபோக வேண்டும் என்று எண்ணவில்லை. இவ்வெண்ணம் தோன்றியதும், இராவணன் விமானத்திலிருந்து குதித்துத் தன் முழு பலத்தையும் கொண்டு, கைலாஸகிரியை வேரோடு பிடுங்க யத்தனித்தான். அதை உணர்ந்த ஈசன், தமது கால் கட்டைவிரலால் கிரியை அழுத்த, அவன் கைகள் கிரியின் கீழ்ச் சிக்கிக்கொண்டன. அவ்வண்ணமே அவன் வெகுநாள் வருந்தினன். பிறகு நாரதரின் உபதேசப்படி இராவணன் பரமசிவனுக்கு ஸாமகானம் செய்து திருப்தியுண்டாக்கி, முன் போல வெளியேறி, விமானத்தை கிரியைச் சுற்றி வலமாகக் கொண்டு போனன்.

இவ்வாறு கர்வம் அடக்கப்பட்டும், இவன் பின்னும் சில முறை மிகக் கர்வத்தை யடைந்தான்.

அச் சமயங்களில் ஒரு தரம் கார்த்தவீரியார்ஜுனன் கையில் அகப்பட்டும், மற்றொரு தடவை வாலியின் வாலில் கட்டுண்டும், வேறொருதரம் சுவேதத்வீப வாசிகளான ஸ்திரீகளால் பந்துபோல் அடிக்கப்பட்டும், மிக வருந்திக் கர்வபங்க மடைந்தான். ஆதலால் எச்சிறப்பு வாய்ந்தாலும் கர்வப்படலாகாது.

வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு.

—இராமாயணம், உத்தர காண்டம்.

---

## 40. கர்வத்தால் உண்டாகும் கேடு (2)

பரத வம்சத்தில் ய்யாதி என்று ஓர் அரசன் இருந்தான். அவன் கிழவனான பின்பு, இராஜ்யத்தைத் தன் இளைய குமாரனான பூருவுக்குக் கொடுத்துவிட்டுத் தவஞ் செய்ய வனம் சென்றான். அங்கு வெகுகாலம் சிறந்த தவத்தைச் செய்துகொண்டிருக்கையில், கால கதியால் அவன் இறக்கும்படி நேரிட்டது. அவன் அரசனாயிருக்கையில் செய்திருந்த புண்ணிய விசேஷத்தாலும், வனத்தில் செய்த தவத்தின் மகிமையாலும், சிறந்த சுவர்க்க பதவி அவனுக்குக் கிடைத்தது. அங்கு அவன் வெகு நாள் சுகமாக வாழ்ந்திருந்து, இந்திரனுக்குச் சமமான கீர்த்தியையும் பெற்றான். ஒரு நாள் அவன் இந்திர சபையில் உல்லாசமாக வார்த்தையாடிக்கொண் டிருக்கையில், இன்ன இன்ன புண்ணியங்களுக்கு இவ்வித பதவி கிடைக்கும் என்ற விஷயத்தைப்பற்றிப் பேச்சு உண்டாயிற்று. அச்சபையில் இருந்தவர்கள் அவரவர்களுக்குத் தெரிந்தவரையில் இவ்விஷயமாகப் பேச, யயாதியும் அதைப்பற்றிப்பேசினான். அப்பொழுது இந்திரன் அவனை நோக்கி, " நீ

எவ்விதப் புண்ணியங்கள் செய்து இப்பதவி பெற்ருய்?''என்று கேட்டான். யயாதி, அக்கேள்விக்குத் தக்க பதிலுரைத்துச் சும்மா இருந்துவிடாமல், "நான் சிறந்த புண்ணியங்களைச் செய்தேன். பெரிய ரிஷிகள் கூட எனக்கு நிகர் இல்லை'' என்று பெருமை பாராட்டினுன். இதைக்கேட்டதும் இந்திரன், "நீ செய்த புண்ணியங்களெல்லாம் இக்கர்வ மொழியோடு க்ஷீணித்துவிட்டன. ஆகையால் என் சேவகர்கள் உன்னை இப்போதே பூலோகத்துக்குத் தள்ளிவிடுவார்கள்; போகலாம்'' என்று கூறினுன். அவன் கூறி வாய் மூடுமுன், சுவர்க்கலோகக் காவலாளர்கள் யயாதியை வந்து பிடித்துக்கொண்டனர். அப்பொழுது அவன் இந்திரனை நோக்கி, "வீண்பெருமையால் எனக்கு இந்தத் துர்க்கதி வந்தது; அப்படி இருந்தபோதிலும் நான் பூமியில் விழும் சமயத்தில் சாதுக்கள் மத்தியில் விழும்படியாவது அனுக்கிரகிக்க வேண்டும்'' என்று வேண்டினுன். இந்திரன் அவ்வாறே அனுக்கிரகிக்க, யயாதி தன் பௌத்திரர் யாகம் செய்துகொண்டிருந்த இடத்திற்கு நேராக விழ, அவர்களுடைய புண்ணிய பலத்தால் மறுபடியும் சுவர்க்கம் அடைந்தான்.

வீண்பெருமை எவனையும் வீழ்த்திவிடும்.

—மஹாபாரதம், ஆதி பர்வம்.

---

## 41. கர்வத்தால் உண்டாகும் கேடு (3)

சூரிய வம்சத்தில் பகீரதன் என்னும் ஓர் அரசன், வெகுநாள் தவம் புரிந்து கங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்தான். அக்காலத்தில் தேவலோகத்தில் உலாவிக்கொண்டிருந்த கங்காதேவி தனது சக்தியின்

விசேஷத்தால் மிகுந்த கர்வங்கொண்டு, அங்கிருந்து மிக்க ஆரவாரத்துடன் உலகையே மூழ்க அடித்து அழித்து விடுவாள்போலப் பயங்கரமாக இறங்கி வந்தாள். பகீரதன் தவத்தை மெச்சிய பரமசிவன், கங்கை விழும் இடத்தில் வந்து நின்றுகொண்டு, தமது சடையை நோக்கிப் பிடித்தார். மிகுந்த ஆரவாரத்தோடு கோபித்து வந்த கங்கையானவள் பரமசிவன் சடையுள் இருந்தவிடந் தெரியாது அடங்கிப்போய், ஒரு மயிரின் நுனியிலிருந்து கீழே விழத்தகுந்த பலமும் இல்லாதவளாய், ஒரு சிறு துளி ரூபமாய்த் தொங்கி நின்றாள். பகீரதன் அவளை விட்டுவிடும்படி வேண்டிக் கொள்ள, அவனது திருப்தியின் பொருட்டு, கங்கையின் ஒரு சிறு பாகத்தை, அவர் தம் சடையிலிருந்து பூமியில் விட்டார். இப்பூமியிலுள்ள கங்காநதி, பகீரதனால் கொண்டுவரப் பெற்றமையின், பாகீரதி என்று பெயர் பெற்றது.

சங்கரபகவானது சடையிலிருந்து இழிந்த இக்கங்கையானவள் அவர் உத்தரவுப்படி பகீரதன் காட்டிய வழியே செல்லத் தொடங்கினாள். அவன் பின்னே போகும் பொழுதும், மறுபடியும் தனது சிறப்பை எண்ணிக் கங்கை சற்றுக் கர்வப்பட்டாள். பகீரதன் பின் சென்று அவன் மூதாதைகள் எல்லோரையும் மேன்மைப்படுத்தப் போகிறோம் என்ற எண்ணம் அவள் கர்வத்தை அதிகப்படுத்தியது. பகீரதன் போகும் வழியில் ஜன்னு என்ற மஹரிஷியின் யாக சாலையைக் கண்டு, மனத்தால் அவருக்கு வந்தனம் செய்துவிட்டு, அந்த யாகசாலையின் ஓரமாகக் கங்கைக்கு வழி காட்டிக்கொண்டு சென்றான். கர்வத்

துடன் வந்துகொண்டிருந்த கங்கையானவள் பகீரதன் காட்டிய வழியிற் செல்லாது, நேராக ரிஷியின் யாகசாலையுள் புகுந்தாள். இதைக்கண்ட ரிஷி கங்கையைத் தமது உள்ளங்கையுள் அடக்கி, ஆசமனீயம் செய்துவிட்டார். பகீரதன் திரும்பிப் பார்த்துக் கங்கையைக்காணுது, மஹரிஷியிடம் வந்து, தான் செய்த தவம் முதலியவைகளை எடுத்துக்கூறிப் பின்னர் நடந்துகொண்ட மாதிரிகளையும் எடுத்துக்காட்டித் தன்மேல் யாதொரு குற்றமும் இல்லையென்று மிக்க வணக்கத்துடன் சொன்னுன். பகீரதனது விநயத்தைக்கண்டு மகிழ்ந்த அந்தமஹரிஷி, கங்கையின் கர்வத்தை அடக்கித் தம் காதால் அவளை வெளியில் விட்டருளினுர். அதனுல், கங்கைக்குக் கர்வம் அடங்கிற்று; ஜான்னவீ என்னும் பெயரும் உண்டாயது. இந்தக் கங்கையைப் பகீரதன் அழைத்துச் சென்று, தன் காரியத்தை முடித்துக்கொண்டான்.

கர்வமுற்ருேர் சிறுமைப்படுவேர்.

—இராமாயணம், பாலகாண்டம்.

---

## 42. பேராசை பெருங் கேடு

சிருஞ்சயன் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் மிகப் பேராசைக்காரன். ஏராளமாகத் தங்கம் சிருஷ்டிக்கவல்ல ஒரு புத்திரன் தனக்கு வேண்டும் என்று அவன் நாள்தோறும் பகவானைப் பிரார்த்தித்து வந்தான். பகவான் அவன் கருத்துக் கிசைந்து ஒரு புத்திரனை அளித்தார். அவன் சரீரத்தினின்றும் வெளிப்படும் வியர்வை, உமிழ்நீர் முதலிய வஸ்துக்களெல்லாம் சுவர்ணமாக மாறியபடியால், அவனுக்கு

மஹாபலி தன் சொல்லைக் காக்கத் தன் தலையைக் கொடுத்தல்.

—45-ம் பக்கம் பார்க்க.




அனுமார் சுக்கிரீவனோடு ஸ்ரீராமரைச் சிநேகம் செய்து வைத்து தமது விசுவாஸத்தைக் காட்டியது.

—70-ம் பக்கம் பார்க்க.

அரசன் சுவர்ணஷ்டீவி என்ற பெயரைக் கொடுத்தான். பேராசை கொண்டிருந்த அரசனுக்குப் புத்திரன் பிறக்கவே மிகுந்த சந்தோஷம் உண்டாக, தங்கத்தினல் அரண்மனைகள் கட்டி அவைகளை யெல்லாம் அதே திரவியத்தால் நிரப்பினன். இப்படி அரசனுக்குச் செல்வம் அதிகரித்ததற்குக் காரணம் இன்னதென்பதை அறிந்த அநேகர், சுவர்ணஷ்டீவியைத் தம் கைவசப்படுத்திக்கொள்ளவும், அதன் மூலமாகத் தாம் அதிகச் செல்வர்கள் ஆகவும் முயன்றார்கள். இதனல், அரசனுக்குத் தன் பிள்ளை விஷயமாய்க் கவலை அதிகமாயிற்று; மனவருத்தமும் துயரும் உண்டாயின. இப்படியிருக்க, ஒருநாள் துணிவுள்ள திருடர்கள் சிலர் கூடி, இரவில் அரசன் அரண்மனையில் துணிவுடன் புகுந்து, சுவர்ணஷ்டீவியைத் தூக்கிக்கொண்டு ஒரு காட்டினுள் பிரவேசித்து விட்டனர். அவன் சரீரத்திலிருந்து எல்லாச் சுவர்ணத்தையும் ஒரே காலத்தில் எடுத்துக் கொள்ளவேண்டும் என்னும் பேராசை அவர்களுக்கு உண்டாய்விட்டது. உடனே அவனைக் கொன்று குடலைக் கீறிப்பார்த்தார்கள். அங்கு ஒன்றும் அகப்படாமையால், இவ்வாறு செய்ததைப்பற்றி அவர்களுள் தர்க்கம் உண்டாயிற்று. அதில் கோப வார்த்தைகள் அதிகரிக்க, உடனே சச்சரவு பலத்தது. அதில் திருடர்கள் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு இறந்தனர். சிருஞ்சயன், சுவர்ணம் சிருஷ்டிக்கும் தன் பிள்ளையைக் காணமல், தேடிக்கொண்டு மிகுந்த துக்கத்துடன் இவ்விடம் வந்துசேர்ந்தான். திருடர்களின் பிண மத்தியில் தன் பிள்ளையும் பிணமாகக் கிடக்கக் கண்டான். அநியாயமாகத் தன்

பேராசையால் பிள்ளை இறக்கும்படி நேரிட்டதே என்ற துக்கம் ஒரு பக்கமும், தன் பிள்ளையைக் குறித்துப் பேராசையால் இத்திருடர்கள் இறந்தனரே என்ற துயரம் ஒரு பக்கமும் வருத்த அதனுல் அரசன் மனம் தளர்ந்து இறந்தான்.

அதிக ஆசை அதிக நஷ்டம்.

—மஹாபாரதம், சாந்தி பர்வம்.



## 43. சூதாடுவதனுல் உண்டாகும் தீங்கு

முற்காலத்தில் நளசக்கரவர்த்தி புஷ்கர ராஜனுடன் சூதாடித் தனது ராஜ்பங்களை எல்லாம் தோற்ருன். பின்னர் ஏழையாகிக் காட்டிற்குப் புறப்பட்டுச் சென்று, மிகுந்த கஷ்டங்களை அனுபவித்து முடிவில் தன் மனைவியையும் விட்டுப் பிரிந்து காட்டில் திரிந்தான். அப்படியிருக்கையில், அவன் அயோத்தியா நகரத்து அரசனை ருதுபர்ண மகாராஜனிடம் சமையற்காரனும், சாரதியுமாக அமர்ந்து இழிவான தொழில் செய்யும்படி நேரிட்டது.

பஞ்ச பாண்டவர்களுள் மூத்தவரான தருமபுத்திரரும், சூதாட்டத்தால் மிகுந்த கஷ்டங்களை அனுபவித்தார். துரியோதனன் சகுனியைக் கொண்டு மாயச் சூதாடுவித்து, அவருடைய இராஜ்யத்தை யெல்லாம் பறித்துக்கொண்டு, அவரை அவர் தம்பிமார்களோடும் அடிமைப்படுத்தி, அவர்களது மனைவியாகிய திரௌபதிக்கும் மிகுந்த துன்பங்களை விளைவித்தான். இப்படியிருந்தும், திரௌபதி தனது தந்திரத்தால் தன் கணவர்களை மீட்டாள். இப்படிச் செய்தபின்பும்,

சகுனி சூதாட்டத்துக்கு அழைக்க, தருமபுத்திரர் இசைந்து, மறுபடியும் ஆடத்தொடங்கினர். அதனால் அவர் தமது இராஜ்யம் முழுமையும் இழந்து, வனத்தில் பன்னிரண்டு வருஷமும், நாட்டில் ஒருவரும் அறியாது உருமாறி ஒரு வருஷமும், மிகுந்த கஷ்டத்துடன் வசிக்கும்படி நேர்ந்தது. அக்காலங்களில் அவர்கள் பட்ட கஷ்டங்களுக்கு அளவேயில்லை.

மேலும், இந்தச் சூதாட்ட விஷயமாகப் பெரிய சண்டைகள் உண்டாவதுமுண்டு. விராட நகரத்தில் உத்தரன், பேடி உருக்கொண்ட அர்ஜுனனைச் சகாயமாக வைத்துக்கொண்டு, வடபுறத்தில் மாடுகளைப் பிடித்து மடக்கிய துரியோதனாதியரை எதிர்த்துப் போர்செய்யப் போய் அர்ஜுனனது சகாயத்தால் வெற்றி பெற்று, அந்தச் சந்தோஷ சமாசாரத்தை விராட ராஜனுக்குச் சொல்லியனுப்பினன். அதைக் கேட்டதும் அரசன், "நம் பிள்ளை பராக்கிரமத்தால் வென்றான்" என்று மிகுந்த சந்தோஷங் கொண்டு, அந்த அவசரத்தில் அருகேயிருந்த தருமபுத்திரராகிய **கங்கப்பட்ட**ரைச் சூதாட அழைத்தான். சூதாட்டத்தின் பலனை அனுபவித்துக்கொண்டிருந்த கங்கப்பட்டர், "இந்தச் சந்தோஷ சமயங்களில் சூதாடுவதால் பிரமாதம் விளையும்" என்று பலவாறு தடுத்துச் சொன்னர். அரசன் கேளாதது கண்டு, அவனோடு சூதாடத் தொடங்கினர். 'உத்தரன் ஜயித்தான்' என்று விராடன் காய்களை உருட்ட, கங்கப்பட்டர் 'பிரஹன்னளை ஜயித்தாள்' என்று காய்களை உருட்டினர். சந்தோஷ வெறி கொண்ட அரசன், 'புருஷன் ஜயிப்பானு, பேடி ஜயிப்பாளா?' என்று கூறிக்

கொண்டே, காய்களால் கங்கப்பட்டர் நெற்றியில் இடித்து இரத்தக் காயப்படுத்தினான். இதனால் அர்ஜுனனுக்கு விராடராஜன் விஷயத்தில் கொஞ்சம் மனவருத்தம் உண்டாயிற்று.

சூது விரும்பேல்.

—மஹாபாரதம், ஆரணிய பர்வம்.

---

## 44. மதுபானத்தின் தீங்குகள்

ஸ்ரீகிருஷ்ண பகவான் அவதரித்த வம்சத்திற்கு யாதவகுலம் என்று பெயர். அதில் ஒவ்வொருவரும் மிகுந்த பராக்கிரமமுடையவராய் இருந்தார்கள். அக் குலத்தவரை எதிர்த்துப் போர் செய்ய வல்லவர் ஒருவருமில்லை. அப்படியிருந்தும், 'கேடுவரும் பின்னே மதிகெட்டுவரும் முன்னே' என்பதற்கேற்ப, அவர்களது முடிவு காலம் சமீபித்துவிட்டதால், அவர்களுக்கு ஏற்கெனவே மதுபானத்திலிருந்த பிரீதி அப்பொழுது அதிகரித்தது. ஒருநாள் அவர்கள் துவாரகைக்கு அருகிலிருந்த பிரபாஸ தீர்த்தம் வந்து ஸ்நானம்செய்து கரை ஏறி, அங்கேயே கொஞ்சநாள் இருப்பதாகத் தீர்மானித்தனர். இப்படியிருக்கையில், ஒருநாள் அவர்கள் மதுவை அதிகமாகக் குடித்துவிட்டனர். அந்தச் சமயத்தில் இரட்டை வரிசையாய் ஒருவர்முன் ஒருவராக உட்கார்ந்துகொண்டு பலவிஷயங்களைப்பற்றி உற்சாகமாகப் பேசத் தொடங்கினர். பேச்சோடு பேச்சாக மஹாபாரத யுத்தத்தில் அவர்கள் செய்த சண்டையின் தருமாதருமங்களைப் பற்றித் தர்க்கம் உண்டாயிற்று. ஒருவரை ஒருவர், 'அநியாயக்காரன், அதரும யுத்தம் செய்தவன்' என்று இகழத்

தொடங்கினர். முதலில் விளையாட்டுச் சண்டையாகத் தொடங்கிற்று. குடிவெறியில் விளையாட்டுச் சண்டை வினைச் சண்டையாக முடிந்தது. இரண்டு வரிசையாய் உட்கார்ந்திருந்தவர், இரண்டு கட்சிகளாக எழுந்துவிட்டனர். சண்டை அதிகரிக்க, அவர்கள் அருகிலிருந்த வைரம் பாய்ந்த கோரைப்புற்களைப் பிடுங்கிக்கொண்டு ஒருவரை ஒருவர் அடிக்கலாயினர். மஹா பலவான்களாதலால், அவர்கள் அடி வீணாக முடியவில்லை. முடிவில் எல்லோரும் ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு இறந்தனர்.

நஞ்சுண்பார் கள்ளுண்பவர்.

—மஹாபாரதம், மௌஸல பர்வம்.

---

## 45. துச்சங்க பலன்

பாண்டவர்கள் வனவாசம் செய்துகொண்டிருக்கையில் ஒருநாள் தூர்வாஸ மஹரிஷி துரியோதனன் சபைக்கு வந்தார். அங்கே துரியோதனன் செய்த உபசாரங்களைப் பெற்றுக்கொண்டு சிலநாள் தங்கினார். பின்னர் அவன் செய்த ஆதித்தியத்தை மெச்சி, "வேண்டிய வரங்களைக் கேள்" என்று அவனுக்கு அனுமதிகொடுத்தார். "பாண்டவர்களை எப்படியாவது கெடுக்கவேண்டும்" என்ற கொடிய எண்ணமுடைய துரியோதனன், தூர்வாஸ ரிஷியை நோக்கி, "சுவாமி! தாங்கள் எங்கள் சகோதரர்களாகிய பாண்டவர்களிடமும் இவ்வாறே சென்று தங்கி, ஒருநாள் அவர்களையும் கிருதார்த்தர்களாக்கவேண்டும். ஆனால், அவர்களது சிறப்பை நன்றாக வெளிப்படுத்த இரவு பத்து நாழிகைக்கு மேல் அங்கேபோய்ச் சேரவேண்டும்"

என்று வேண்டிக்கொண்டான். அப்போது பாண்டவரால் 'அக்ஷயபாத்திரம்' (சூரியனால் கொடுக்கப்பட்டுத் திரௌபதி சாப்பிட்டு அதைக் கவிழ்க்கும்வரையில் தடையின்றி எல்லோருக்கும் போசனம் கொடுக்கும் பாத்திரம்) கவிழ்க்கப்பட்டபின் ரிஷிபோனால், பாண்டவர்களால் அவருக்கும் அவர் சிஷ்யர்களுக்கும் போசனம் அளிக்கமுடியாமற் போகும்; அவர்கள் துர்வாஸரின் சாபத்துக்கு ஆளாவார்கள் என்பதே துரியோதனன் கருத்து. இந்தச் சூதை யறியாத ரிஷி, சிஷ்யர்களோடு அவ்வாறே பாண்டவர்களிடம் செல்ல, தருமபுத்திரர் அவர்களை அருகிலிருந்த நதிக்குச் சென்று நீராடிவரும்படி அனுப்பிவிட்டார். அக்ஷயபாத்திரம் கவிழ்க்கப்பட்டு விட்டதால், திரௌபதி துக்கத்தால் மனம் உருகிப் பகவானைப் பிரார்த்தித்தாள். உடனே பகவான் வந்து, அக்ஷய பாத்திரத்தைக் கொண்டுவரச் சொல்லி, அதனுள் இருந்த ஒரு கீரையையும் சோற்றுப் பருக்கையையும் கையில் எடுத்துத் தீர்த்தம் வார்த்துக்கொண்டு, "இதனால் சர்வ ஜகத்தும் திருப்தி யடையட்டும்" என்று சொல்லி உட்கொண்டார். உடனே நதியில் ஸ்நானம் செய்தவர்களுடைய வயிறெல்லாம் நிரம்பின. அக்ஷய பாத்திரத்திலும் அன்னபானாதிகள் நிரம்பின. தருமபுத்திரர், ரிஷி முதலியோரை அழைத்துவரப் பீமனை அனுப்பினர். நடக்கச் சக்தியில்லாமல் தள்ளாடிக் கொண்டு, துர்வாஸர் தமது சிஷ்யர்களுடன் தருமபுத்திரர் இருக்கும் இடம்வந்து பகவானைக் கண்டார். உடனே அவருக்குத் தண்டனிட்டு, "சுவாமி! அறியாமையால், துரியோதனன் மரியாதைகளை அங்கீ

கரித்தேன் ; அதனால் எனக்கு இந்த அநர்த்தம் சம்பவித்தது. எங்களைக் காத்தருளவேண்டும்'' என்று பிரார்த்தித்து, பின் விருத்தாந்தத்தை ஆதியோடந்தமாக எடுத்துரைத்தார். பின்னர் பகவத் கிருபையால் அவர்கள் வயிறு முன்போல ஆக, அவர்கள் சஞ்சாரம் செய்யப் புறப்பட்டனர்.

**தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற**
**தீயார்சொற் கேட்பதுவும் தீதே—தீயார்**
**குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோ**
**டிணங்கி யிருப்பதுவும் தீது.**

—மஹாபாரதம், ஆரண்ய பர்வம்.

---

## 46. பொருமை

**கனித்திரர்** என்று ஒரு முனிவர் இருந்தார். அவர் அடக்கம் உடையவராயும் தெய்வபக்தி யுடையவராயும் இருந்தமையால், அவரிடம் எல்லோரும் பிரீதி வைத்திருந்தார்கள். அவருக்குச் சகோதரர் அநேகர் உண்டு. அவர்களிடத்தில் அநேக கெட்ட குணங்கள் பொருந்தியிருந்தன. அதனால் அவர்களை எல்லோரும் வெறுத்தார்கள். கனித்திரர் எல்லோராலும் கொண்டாடப்படும் தருணத்தில் அவர்களுக்குப் பொருமை யுண்டாயிற்று. அதனால் எப்படியாவது அவரைக் கொன்றுவிடவேண்டும் என்று அவர்கள் தீர்மானித்தார்கள். அதற்காக அவர்கள் ஒரு யாகம் செய்து அதிலிருந்து ஒரு பெரும் பூதத்தை யுண்டாக்கி அவரைக் கொன்றுவிட்டு வரும்படி அதை ஏவினர்கள். அதுபோலவே அந்தப் பூதம் கனித்திரரிடம் சென்றது. அவரது அமைதி, தெய்வபக்தி முதலிய

நற்குணங்களைக் கண்டு, "இவ்வித நல்ல சுபாவமுடையவரை எவ்வாறு அணுகிக் கொல்வது?" என்று தயங்கி நின்றது. "இவரைக் கொல்லும்படி நம்மை அம்மகா பாபிகள் ஏன் ஏவினர்?" என்று, ஏவினர்கள் மேல் மிகுந்த கோபங்கொண்டது. இம்மாதிரி பைசாசங்கள், தாம் ஏவப்பட்ட தொழிலை முடிக்க முடியாமல் திரும்பும்படி நேரிட்ட காலங்களில், அனுப்பினவர்களை வந்து கொல்வது வழக்கம். அம்மாதிரியே இந்தப் பைசாசமும் உடனே திரும்பிவந்து, கடுஞ்சினத்தினால் கனிக்கிராது சகோதரர் எல்லோரையும் அடித்துக் கொன்றுவிட்டது.

கெடுவான் கேடு நினைப்பான்.

---

## 47. ஆத்திரம் ஆகாது.

யயாதி மஹாராஜன் பேரர்களுள் பிரதர்த்தனன் என்பவன் ஒருவன். அவன் அரண்மனையில் நாரதர் கொஞ்சநாள் வசிக்கும்படி நேரிட்டது. அப்பொழுது அவன் அவருக்குத் தகுந்த வழிபாடுகள் செய்து மிகுந்த புண்ணியம் சம்பாதித்தான். இப்படியிருக்கையில் ஒருநாள் அவரை நான்கு குதிரைகள் பூட்டிய தனது இரதத்தின்மேல் ஏற்றிக்கொண்டு நகரத்துக்கு வெளியே புறப்பட்டான். போகும் வழியில் ஒரு பிராமணன் வந்து அரசனை நோக்கி, "எனக்கு ஒரு குதிரைவேண்டும்" என்று யாசித்தான். அப்பொழுது பிரதர்த்தனன் மிகுந்த சாந்த மனதுடன், "அரண்மனை போனதும், ஒரு குதிரை கொடுக்கிறேன்" என்று சொன்னான். பிராமணன் அதற்கு இசையாமல், தனக்கு அப்பொழுதே ஒரு குதிரை

அவசியம் வேண்டியது என்று கட்டாயப்படுத்த, அரசன் தாமதியாது தேரில் கட்டியிருந்த ஒரு குதிரையை அவிழ்த்துக் கொடுத்தான். கொடுத்ததும், முறையே மூன்று பிராமணர்கள் அவ்வாறே வந்து கேட்டார்கள். அவர்களுக்கும் ஒவ்வொரு குதிரையாக அரசன் எல்லாக் குதிரைகளையும் கொடுத்துவிட்டான். பின்னர் நாரதரைத் தேரில்வைத்துத் தானே இழுக்கத் தொடங்கினன். சற்று நேரம் சென்றவுடன் சில பிராமணர்கள் ஒருவர்பின் ஒருவராய், முன் ஏற்பாடு செய்துகொண்டவர்போல எதிர் நோக்கிவரவே, குதிரைகளை வாங்கிப்போனதால் மனம் பொறுக்காதவனைப் பதறி, "பிராமணர்கள் கேட்கத்தகுந்த வஸ்து இனி என்னிடம் ஒன்றுமில்லை" எனக் கூறிவிட்டான்.

இதனால் அவன் எவ்வளவோ புண்ணியம் செய்தும் கொஞ்சம் பாபம் வந்து சம்பவித்தது.

கலப்பாலில் துளி விஷம்போல, ஆத்ரம்
சிறந்த புண்ணியச் செயல்களையும் பழுதாக்கிவிடும்.

—மஹாபாரதம், ஆரண்ய பர்வம்.

---

## 48. ஜீவஹிம்ஸை

மாண்டவ்யர் என்று ஒரு ரிஷி இருந்தார். அவர் பால்யத்தில் வண்டுகளையும் மற்றும் சிறு பூச்சிகளையும் முட்களால் குத்தி எடுத்து, அவைகள் துடிப்பதைக் கண்டு ஆநந்திப்பது வழக்கம். தகுந்த வயது வந்ததும் அவர் ஒரு மஹரிஷியாகி, தனிமையாக ஓர் ஆசிரமத்தில் தங்கி இருந்து, தியான சமாதியில் மூழ்கியிருந்தார்.

அப்பொழுது அருகிலுள்ள ஓர் ஊரில் பெரிய

கொள்ளை ஒன்று நடந்தது. அங்கே திருடிய திருடர்கள் வெகு சாக்கிரதையாக இருந்த அவ்வூர்க் காவலர்களால் துரத்தப்பட்டு, வெகு வேகமாக ஓடிவரும் பொழுது, வழியில் மாண்டவ்யர் ஆசிரமத்தைக்கண்டு அதனுள் பிரவேசித்து, மிகுந்த ரகசியமான இடத்தில் சென்று ஒளிந்துகொண்டனர். அவ்விதம் வேகமாய் ஓடி ஒளியும்பொழுது இரண்டொரு நகைகளை ரிஷியின்முன் தவறிப் போட்டுவிட்டுப் போய்விட்டனர். ரிஷி சமாதியில் இருந்ததினால், அந்த நடவடிக்கைகள் ஒன்றும் அவருக்குத் தெரியவில்லை.

துரத்திவந்த காவலாளர்கள், திடீரென்று திருடர்கள் மறைந்த விடத்தைக் குறிப்பாக வைத்துக் கொண்டு வந்து, அங்குச் சுற்றுமுற்றும் பார்த்தனர். மாண்டவ்ய ரிஷியின் ஆசிரமம் காணப்பட்டதும் உடனே உட்புகுந்து பார்க்க, சில நகைகள் அவர் முன் கிடக்கக் கண்டனர். விழித்த கண்ணுடனிருந்த அந்த ரிஷியை நோக்கி, "திருடர்கள் இவ்வழி வந்தார்களா?" என்று அக்காவலாளர் அநேகந்தரம் கேட்டனர். ரிஷி சமாதியில் இருந்ததனல், பதில் ஒன்றும் சொல்லவில்லை. காவலாளர்கள் ஆசிரமம் முழுவதும் தேடினர். திருடர்கள் அகப்பட்டுக் கொண்டார்கள். காவலாளர்கள், ரிஷி சமாதியில் இருக்கிறார் என்றுணராது, அவர் விழித்த கண்ணுடன் கேட்ட கேள்விக்குப் பதில் ஒன்றும் சொல்லாதிருந்ததையும், அவர் எதிரே நகைகள் காணப்பட்டதையும், அவர் ஆசிரமத்தில் திருடர்கள் ஒளிந்திருந்ததையும் சேர்த்து நோக்கி, "இந்த ரிஷியும் திருடர்களில் ஒருவன்" என்று தீர்மானித்துத் திருடர்களுடன் ரிஷியையும் சேர்த்துப்பிடித்து, நியாயாதி

பதியின்முன் கொண்டுவந்துவிட்டுத் தாம் கண்டதை யெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லினர். "எல்லோரையும் கழுவேற்றி விடவேண்டும்" என்று நியாயாதிபதி தண்டனை விதித்தான். கழுமரத்தில் மாட்டிய திருடர் யாவரும் இறந்தனர். ரிஷிமட்டும் வெகு நாழிகை உயிருடன் இருந்தனர். அதைக் கண்டு காவலாளர்கள் அரசனிடம் தெரிவித்தார்கள். அரசன் ஓடிவந்து நோக்கி, "அநியாயமாக ரிஷியைக் கழுவேற்றி விட்டீர்களா?" என்று பரிதபித்து, ரிஷியைக் கழுவிலிருந்து எடுத்துவிடும்படி உத்தரவு செய்தான். காவலாளர்கள் எவ்வளவு முயன்றும் ரிஷியை எடுக்கமுடியவில்லை. உடனே அரசனது உத்தரவின்படி, கழுமரத்தை ரிஷியின் தலைக்குமேலும் இடுப்புக்குக் கீழுமாகத் தறித்துவிட்டார்கள். அது முதல் அந்த ரிஷிக்கு ஆணிமாண்டவ்யர் என்ற பெயர் வந்தது. கழுவேற்றப்பட்டதனால் அவருக்கு உண்டான நோயும் உடனே நீங்கிவிட்டது. பிறகு அவர் யமதர்மராஜனிடம் சென்று, "ஒரு குற்றமும் அறியாத எனக்கு இம்மாதிரி கழு ஏறி வருந்தும்படி வருவானேன்?" என்று கேட்டார். அதற்கு யமன், "நீர் மஹா தருமாத்மாவா யிருந்தபோதிலும், சிறுவயதில் பூச்சி முதலியவைகளை முட்களால் குத்தி, அவை துடிப்பதைக் கண்டு ஆநந்தித்து வந்தீர். அதற்காக உம்மையும் தகுந்த சமயத்தில் கழுவேற்றி விட்டார்கள். நீர் சிறுவயதில் பாபம் செய்ததால் கொஞ்சநாழிகை வருந்தும்படி நேரிட்டதே ஒழிய வேறில்லை" என்று மறுமொழி கூறினர்.

பிராணி ஹிம்ஸை பெருங்கேடு விளைவிக்கும்.

—மஹாபாரதம், ஆதி பர்வம்.

---

## 49. பொய் நட்பு

**துருபதன்** என்று ஓர் அரசன் இருந்தான். அவன் தன் இளமைப்பருவத்தில் அக்னிவேச்யரிஷியினிடம் வில்வித்தை பயின்றவன்; அப்பொழுது அவனோடு **துரோணன்** என்னும் ஒரு பிராமணனும் வித்தை பயின்றுவந்தான். இருவருக்கும் சிநேகம் உண்டாயிற்று. சிநேகம் நாளுக்குநாள் அதிகரிக்க, ஒருநாள் துருபதன், துரோணரை நோக்கி, "நான் ஒரு இராஜகுமாரன்; எனக்கு இராஜ்யம் கிடைத்ததும், நான் உனக்குப் பாதி இராஜ்யம் கொடுப்பேன்" என்று கூறித் தனது அன்பை வெளியிட்டான். இவர்கள் குருதட்சிணை கொடுத்துவிட்டு, முறையே தத்தம் இருப்பிடம் சென்றனர். காலக்கிரமத்தில் துருபதன் பாஞ்சால தேசாதிபதியானான்; துரோணன் கலியாணம் செய்துகொண்டு, கிருஹஸ்தாசிரமத்தில் அமர, அவருக்கு **அசுவத்தாமன்** என்னும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தை, தாய்ப்பால் இல்லாமையால் வாய் ஓயாது அழ, துரோணர், மனைவியால் தூண்டப்பட்டு, "பாதி இராஜ்யம் கொடுக்கிறேன் என்று நம்முடன் கூறிய நமது சிநேகிதன் இந்த சமயத்திற்கு ஒரு பசுவாவது கொடுக்கமாட்டானா? கொடுப்பான்" என்ற உறுதியுடன் துருபத ராஜசபைக்குச் சென்றார். துருபதன் அவரை முன்பின் அறியாதவன்போல் நோக்கி, "நீர் யார்?" என்று கேட்டான். "உமது பால்ய சிநேகிதன்" என்று துரோணர் பதில் சொன்னார். "இந்த ஏழைப் பார்ப்பானுக்கும், எனக்கும் சிநேகம் இருந்திருக்குமா? சபையோர்களே! நீங்களே பாருங்கள்" என்று துருபதன் பரிகாசம் செய்து

நகைத்தான். "உனக்கும் எனக்கும் இருந்த சிநேகத்தில் நீ, 'நான் பாதி இராஜ்யம் தருவேன்' என்றும் சொல்லியிருக்கிறாய். எனக்கு ஒரு பசு இப்பொழுது அவசியம் வேண்டும்; கொடுத்தால் மிகவும் நலமாக இருக்கும்" என்று துரோணர் கூறினார். "ஏது பிராமணன் அடிமடியில் கையைப் போட்டுவிட்டானே, இவனிடத்திலா நான் இப்படிச் சொல்லியிருப்பேன்!" என்று கூறி, துரோணரை வெளியில் தள்ளிவிடும்படி காவலாளர்க்கு அவன் உத்தரவு செய்தான். வெளியே போகுமுன், துரோணர் துருபதனை நோக்கி, "என்னை ஆசை காட்டி மோசஞ்செய்ததற்காக உன்னை என் சிஷ்யர்கள் மூலமாகச் சிறை செய்து அவமானப்படுத்துகிறேன்" என்று சபதம் செய்துகொண்டு போய்விட்டார். பின்னர் பாண்டவர் முதலியோருக்கு அவர் வில்வித்தை கற்பித்து, அவர்களுள் அர்ஜுனன் மூலமாக இந்தச் சபதத்தை நிறைவேற்றினார்.

**மாறா நட்பே நட்பு;**
**மற்றவையெல்லாம் போய் நட்பு.**

**—மஹாபாரதம், ஆதி பர்வம்.**

---

## 50. அவசரம் ஆகாது

**ஸ்ரீ** கிருஷ்ண பரமாத்மா துவாரகையில் எழுந்தருளியிருந்த காலத்தில், **ஸத்ரஜித்து** என்று ஓர் அரசன் இருந்தான். அவன் சூரியபகவானை ஆராதித்து **சியமந்தகமணி** என்னும் ஒரு சிறந்த இரத்தினத்தை அடைந்தான். அந்த மணிக்கு, நாள்தோறும் ஏராளமான சுவர்ணத்தைக் கொடுக்கும் சக்தி இருந்தது.

ஸத்ராஜித்து அந்த மணியைக் கழுத்தில் அணிந்து கொண்டு, துவாரகைக்கு வந்திருந்த சமயத்தில், பகவான் அதைக் கண்டு தமக்கு அதைக் கொடுத்துவிட்டால் நலமாக இருக்கும் என்று வாய்திறந்து கேட்டார். மணியினிடமிருந்த அபிமானத்தால் ஸத்ராஜித்து மறுத்துவிட்டுத் தன் இருப்பிடம் சென்முன். பின்னர் கொஞ்சநாள் கழித்து அவன் சகோதரனுகிய பிரசேனன் என்பவன் அம் மணியைக் கழுத்தில் அணிந்து கொண்டு வேட்டைக்குப் புறப்பட்டான். காட்டில் ஒரு சிங்கம் அவனைக் கொன்று அந்த மணியை எடுத்துக் கொண்டு போய்விட்டது. அதை ஒரு கரடிராஜன் கண்டு, சிங்கத்தோடு சண்டை செய்து அந்த மணியைப் பிடுங்கிக்கொண்டு, தன் குகைக்குச்சென்று தன் குழந்தையின் தொட்டிலின்மேல் அதை அலங்காரமாகக் கட்டிவைத்தான். பிரசேனன் இறந்த காலத்தில் அவன் அருகே ஒருவரும் இல்லாதிருந்ததனுல், இந்தச் சங்கதி ஸத்ராஜித்துக்குத் தெரியாமல் போய்விட்டது. மணி அகப்படாமையால், "இந்த மணியை எனக்குத் தரவேண்டும்" என்று யாசித்த கிருஷ்ணனேதான், தன் சகோதரனைக் கொன்று அம்மணியை எடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று அவசரப்பட்டுப் பகவான்மேல் பழிசுமத்தினுன்.

இந்தச் சங்கதி பகவான் காதிற்பட்டதும், பழி வந்துவிடும் என்று மிகப் பயந்து, பகவான் பிரசேனன் இறந்த இடம்சென்று, சிங்கம் ஓடிப்போன வழியைக் கண்டுபிடித்து, அதன் மூலமாகக் கரடிராஜன் குகை வந்துசேர்ந்தார். அங்குப் பகவானுக்கும் கரடிராஜனுக்கும் பெரும்போர் விளைந்தது. அதன் முடி-




பகவான் குசேலரை உபசரித்தல்

—73-ம் பக்கம் பார்க்க.



பகிரதனல் கொண்டுவரப்பட்ட கங்கையின்
கர்வம் பங்கமானது.

—85-ம் பக்கம் பார்க்க.

வில் கரடிராஜன், தான் ஜாம்பவான் என்றும், இதற்கு முன் தான் இவ்வாறு தோல்வி அடைந்ததே இல்லை யென்றும் கூற, பகவான் தமது சிறப்பை அவனுக்குத் தெரிவித்தார். ஸ்ரீராமசந்திர மூர்த்தியின் அவதாரமே பகவான் என்றுணர்ந்த ஜாம்பவான், சியமந்தகமணி யை உடனே கொண்டுவந்து கொடுத்தான். அதைப் பகவான் எடுத்துச் சென்று, ஸத்ராஜித்திடம் கொண்டு போய் ஒப்புவித்துத் தம்மேல் சுமத்தப்பட்ட பழி யைத் தீர்த்துக் கொண்டார். ஸத்ராஜித்து தனது அவசர காரியத்தைப்பற்றி எண்ணி எண்ணி வெட்க மடைந்து, பகவானுக்குத் தான் செய்த அபராதத்தை அவர் மன்னிக்கும்பொருட்டுத் தன் பெண்ணாகிய சத்தியபாமையை அவருக்கு விவாகம் செய்து கொடுத்து, அந்தச் சியமந்தக மணியையும் அவளுக்கு ஸ்திரீதனமாகக் கொடுத்துவிட்டான்.

**அவசரப்பட்டு எவரையும் அவமரியாதே.**

—பாகவதம், 10-வது ஸ்கந்தம்.

------

## 51. எவர் மனத்தையும் புண்படுத்தலாகாது (1)

தருமபுத்திரர் கோலாகலமாக ராஜஸூயயாகம் செய்த காலத்தில் மற்றெல்லா அரசர்களைப்போலத் துரியோதனாதியரும் வந்து, தமக்குக் கொடுத்த காரி யங்களைச் செய்துவந்தார்கள். யாகம் முடிந்ததும், வந் திருந்த அரசர்கள் எல்லோரும் தத்தம் இருப்பிடம் சேர்ந்தனர். துரியோதனன், சகுனி முதலியவர்கள் மாத்திரம் தருமபுத்திரருக்காக மயன் கட்டிகொடுத் திருந்த விசித்திர சபையைப் பார்த்துவிட்டுப் போக வேண்டும் என்னும் எண்ணங்கொண்டு, பின் தங்கி

னர். ஒருநாள் தருமபுத்திரர், தமது தம்பிமார்கள், அந்தப்புர ஸ்திரீ ஜனங்கள் முதலியவர்களோடு சபையில் வீற்றிருக்கையில், துரியோதனதியர் சபையைப் பார்க்கச் சென்றனர். அங்கு மயனது விசித்திர வேலையால், பள்ளமில்லாத இடம் பள்ளமாகத் தண்ணீர் தேங்கியிருப்பது போல அவர்களுக்குத் தோன்ற, அந்த விசித்திர சபையின் இரகசியத்தை அறியாதவர்களும், அறிந்தவர்களை முன்னிட்டுச் செல்லாதவர்களுமான அவர்கள், அவ்விடத்தில் முழங்கால்களுக்கு மேல் துணிகளைத் தூக்கிக்கொண்டு நடந்தார்கள். இதைக் கண்டதும் பீமசேனன், திரௌபதி முதலியோர் கலகல வென்று நகைத்தனர். ஒரு சிறு தடாகமுள்ள மற்ருேரிடமோ, மயனல் அமைக்கப்பட்ட பளிங்குக் கற்களின் ஒழுங்கால் மேடாகவும், தண்ணீர் இல்லாத இடம்போலவும் காணப்பட்டது. துரியோதனதியர் அசாக்கிரதையாகச் சென்று, அங்குத் திடீரென்று தண்ணீரில் விழுந்தனர். அதைக் கண்டதும் அங்கிருந்தோர் அதிகமாக நகைக்க, அதைப் பார்த்து தருமபுத்திரர், அவ்வாறு செய்வது நியாயமன்று எனக்கூறித் தமது காரியத்தைப் பார்க்கத் தொடங்கினர். இதற்குள் மிகுந்த குழப்பமடைந்த துரியோதனதியர் அவமானம் பொறுக்கமாட்டாது, ஒரு வாயிற்படிவழியாக வெளியேற யத்தனித்தனர். அவ்வாயிற்படியோ கண்ணுடியினின்றும் சுவரில் பிரதிபலித்த ஒரு வெறுந் தோற்றமாக இருந்ததனல், துரியோதனதியர் அங்கே சென்று, முட்டிக்கொண்டு தத்தளித்தனர். இவ்வாறு அநேகவிதமாகத் தத்தளித்து, முடிவில் ஒரு வழியால் அவர்கள் சபையைவிட்டு வெளியே

வந்தார்கள். அவர்கள் தத்தளித்துக் கொண்டிருந்த பொழுதெல்லாம் தருமபுத்திரர் கூறும் புத்திமதியைக் கவனியாது, பீமன் முதலியோர் வயிறு வெடிக்கச் சிரித்தனரே யொழிய, அவர்களுக்குச் சகாயஞ்செய்ய முன்வரவில்லை. இம்மாதிரிப் புண்படுத்தப்பட்டதனல், துரியோதனனுக்குப் பாண்டவர்களிடத்தில் பொறாமை அதிகரித்தது. அது மூலமாகப் பாண்டவர்களுக்கு மிகுந்த கஷ்ட நஷ்டங்கள் உண்டாயின.

தீயினுல் சுட்டபுண் உள்ளாறும் ஆருதே
நாவினுல் சுட்ட வடு.

—மஹாபாரதம், சபா பர்வம்.

---

## 52. எவர் மனத்தையும் புண்படுத்தலாகாது (2)

பாண்டவர்களை மாயச்சூதில் வென்று, காட்டுக்குத் துரத்திவிட்டு, மிகுந்த களிப்புடன் துரியோதனுதியர் அரசாண்டுகொண்டிருந்த காலத்தில் அவர்கள் சபைக்கு **மைத்திரேயர்** என்ற ஒரு மஹரிஷி வந்தார். பாண்டவர்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை அவர் கேள்வியுற்று, மிகுந்த துக்கமடைந்து துரியோதனுதியர் செய்தது மிகுந்த அநியாயம் என்றும், பாண்டவர்கள் கோபாவேசத்தைத் தாங்குவது அசாத்தியமான காரியமென்றும், அவர்களுடன் சீக்கிரத்தில் சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்றும் வெகுவாகப் புத்திமதி கூறினர். அப்பொழுது துரியோதனன், அவர் சொல்லை நியாயமென்று கொள்ளாமலிருந்ததோடு, தனது இடது துடையைக் கையால் தட்டிக் கொண்டு வேறு விஷயத்தில் கவனம் செலுத்தினவ

னைப், ரிஷியின் சொல்லை மதிக்கவில்லை யென்பதையும் குறிப்பால் உணர்த்தினன். மைத்திரேயர் தமது நல்ல வாக்கியங்களெல்லாம் வீணானமை கண்டு, மனம் நொந்து துரியோதனனை நோக்கி, "நான் சொல்லும் உறுதி வார்த்தைகளைத் தொடை தட்டிக்கொண்டு அலக்ஷியம் செய்ததற்காக, நீ அந்தத் தொடையிலேயே அடிபட்டு இறக்கக்கடவாய்" என்று சபித்தார்.

இம்மாதிரியே, இராமாயணத்திலும் நல்லவர் மனத்தைப் புண்படுத்தியதால், இராவணனுக்கும் ஒரு சாபம் சம்பவித்தது. அதாவது முன்பு இராவணன் திக்குவிஜயத்திற்குப் புறப்பட்டு, அரசர்களையெல்லாம் வலியச் சண்டைக்கு இழுத்து, தன் வர பலத்தால் அவர்களை முறியடித்துக்கொண்டு வந்த காலத்தில், அயோத்திமாநகரம் வந்து, அங்கு அரசாண்டுகொண்டிருந்த அநரண்ய மகாராஜாவைச் சண்டைக்கு அழைத்தான். அவர் தமது சேனைகளோடு வெகு உற்சாகமாகச் சண்டை செய்தார்; முடிவில் வரபலம் மிகுந்த இராவணனால் அடிக்கப்பட்டு, யுத்தகளத்தில் விழும்படி நேர்ந்தது. அத்தருணத்திலும் அந்தக் கொடிய இராவணன் இறக்கும் அரசனைப் பார்த்து, பரிகாச வார்த்தைகளால் வெகுவாகப் புண்படுத்தினன். மஹா தருமாத்மாவான அநரண்யர் மனம் நொந்து, இராவணனை நோக்கி, "என் குலத்தில் வரும் அரசனலே நீ யுத்த களத்தில் உயிர் நீங்கி விழக்கடவாய்" என்று சபித்தார். அச் சாபம் பிற்காலத்தில் பொய்யாகவில்லை. அயோத்தி அரச

ரான ஸ்ரீ ராமபிரானுல் இராவணன் கொல்லப்பட்டது பிரசித்தமானது.

குணம் என்னும் குன்றேறி நின்ருர் வெகுளி
கணமேயும் காத்த லரிது.

{ மஹாபாரதம், ஆரணிய பர்வம்,
{ இராமாயணம், உத்தர காண்டம்.

---

## 53. பெரியோரை அவமதித்தல் கூடாது

துவாரகைக்கருகில் பிண்டாரகம் என்று ஒரு தீர்த்தம் உண்டு. அதில் ஒரு காலத்தில் பகவானைத் தரிசிக்கவேண்டும் என்னும் ஆவலுடன் சில ரிஷிகள் வந்து தங்கியிருந்தனர். யாதவச் சிறுவர்கள் எல்லோரும் சேர்ந்து, தம்முள் முதியவனை ஸாம்பவனுக்குக் கர்ப்பிணி வேஷம்போட்டு, ரிஷிகள்முன் நிறுத்தி, மிகுந்த விநயத்துடன் கேட்பவர்கள்போல, "ஓ! தபோதனர்களே! இந்தப் பெண்மணிக்கு என்ன குழந்தை பிறக்கும்? ஞானதிருஷ்டியால் அறிந்து சொன்னல் எங்களுக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாகும்" என்று விண்ணப்பம் செய்து கொண்டனர். ரிஷிகள் வாயிலிருந்து என்ன வாக்குப் பிறக்குமோ என்று மிகுந்த ஆவலோடு இருப்பவர்கள்போல் பாசாங்கும் செய்தனர். இவர்களுடைய சூதான விளையாட்டையும், முடிவில் பரிகாசம் செய்து சிரிக்கவேண்டும் என்னும் இவர்களுடைய கெட்ட எண்ணத்தையும் அறிந்துகொண்ட அந்த ரிஷிகள், மிகுந்த கோபத்துடன், "உங்கள் குலத்தை நிர்மூலமுமாக்கும் ஓர் உலக்கையையே இவள் பெறுவாள்" என்று சபித்தார்கள். இந்தக் கொடிய சாபம் பிறந்ததும், யாதவப் பிள்ளைகள் மிகவும் நடு

நடுங்கி, ஸாம்பனது வேஷத்தைக் கலைத்து உள்ளே பார்க்கையில், வயிற்றின்மேல் வைத்திருந்த துணிகள் எல்லாம் சேர்ந்து ஓர் இருப்பு உலக்கையாய் மாறியிருந்ததைக் கண்டார்கள். உடனே அதை எடுத்துக் கொண்டு, துவாரகைக்கு வந்து, ரிஷிசாபத்தை எல்லோருக்கும் தெரிவித்து, உலக்கையையும் காட்டினர். யாதவர்கள் எல்லோரும் சேர்ந்து, மிகவும் பயந்து அந்த உலக்கையைத் தூள்தூளாக ராவிப் பொடியாக்கி சமுத்திரத்தில் எறிந்துவிட்டனர். இப்படிச் செய்தும் ரிஷிசாபம் வீண்போகவில்லை. அவ்விரும்புப் பொடிகள் கோரைப் புற்களாகச் சமுத்திரக்கரையில் முளைத்திருந்து, பின்னர் இவர்களுக்குள் உண்டான கலகத்தில், ஒருவரை ஒருவர் அடித்துக் கொள்ளத்தகுந்த ஆயுதங்களாகி, ரிஷி சாபத்தை மெய்யாக்கின.

பெரியோர் கோபம் பெருங்கேடு விளைவிக்கும்.

—மஹாபாரதம், மௌஸல பர்வம்.

---

## 54. பொய்யின் இழிவு

மஹாபாரத யுத்தத்தில் பதினைந்தாம் நாள் மாலைக் காலத்தில் துரோணாசாரியர் செய்துவந்த கொடிய யுத்தத்தைப் பொறுக்க முடியாது பாண்டவசேனை சிதறி ஓடிற்று. அத்தருணத்தில் பகவான் அர்ஜுனனை நோக்கி, "துரோணர் தமது கையில் ஆயுதம் எடுத்துப் போர்செய்யும் வரையில் அவரை ஒருவராலும் ஜயிக்கமுடியாது. அவர் பிள்ளை அசுவத்தாமாவைக் கொன்றுவிட்டு, யாராவது அந்தச் சங்கதியை அவருக்குத் தெரிவித்தால், அவர் தமது ஆயுதங்களை எறிந்துவிடுவார். அப்பொழுது அவரை எவ

ரும் எளிதில் வெல்லலாம்" என்றார். இதற்கு அர்ஜுனன் மனம் ஒப்பவில்லை. இதைக் கேட்டவுடனே பீமசேனன், மாளவ தேசாதிபதியாகிய இந்திரவர்மன் என்பவனுடைய அசுவத்தாமா என்ற யானையைக் கொன்று தள்ளிவிட்டு, துரோணாசாரியரிடம் சென்று, "அசுவத்தாமா இறந்தான்" என்று தெரிவித்தான். இதைத் துரோணர் நம்பாது, சத்தியசந்தராகிய தருமபுத்திரரைக் கேட்டுத் தெளியவேண்டும் என்று அவரைத் தேடலுற்றார். அப்பொழுது பாண்டவ சகாயரான பகவான், தருமபுத்திரரிடம் சென்று பாண்டவ சேனை துரோணரால் படும் பாட்டை எடுத்துக் கூறி, "துரோணர் உம்மைக் கேட்டால், அசுவத்தாமா இறந்தான்" என்று சொல்லி எங்களைக் காப்பாற்றும். அநேகம் உயிர்களைக் காக்க ஒரு பொய் சொல்வது பாபம் அன்று" என்று நியாயம் கூறினர். அப்பொழுது பீமன், "நான் அசுவத்தாமா என்ற ஒரு யானையைக் கொன்றிருக்கிறேன். ஆகவே அசுவத்தாமா இறந்தானென்று நீர் சொல்லுவது முற்றும் பொய்யாகாது. எங்களைக் காத்த புண்யமும் வந்துசேரும். ஆதலால் இவ்வாறே சொல்லிவிடும்" என்று தைரியஞ்சொன்னான். தருமபுத்திரருடைய மனமோ இதைக் கூறப் பதைபதைத்தது. ஆனால், இவ்வாறு சொல்லாவிடிலோ பெரிய ஆபத்துவரும் என்றும் கண்டார். சொல்லிவிட்டால், பொய் சொன்னவன் ஆவோமே என்றும் மயங்கினர். ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு, துரோணர் கேட்குங்காலத்தில், "இறந்தான் அசுவத்தாமா என்னும் யானை அரசு" என்று கூறத்தொடங்கி, மனக் குழப்பத்தால் பின்பாகத்தை மெதுவாக உச்சரித்தார்.

இது துரோணர் காதில் விழாதபடி பக்கத்திலிருந்தவர்கள் எழுந்திய கோஷங்களால் தடுத்துவிட்டனர். ஆகிலும், தாம் கூறிய வார்த்தையால் துரோணருக்குக் கேடு விளையும் என்று மனப்பூர்வமாக அறிந்தே தருமபுத்திரர் இச் சொல் சொல்லியதால், அவருடைய தருமத்தின் சிறப்புக் குறைந்துவிட்டது. அதனால் பூமிக்கு மேல் நான்கு விரல் உயரத்தில் ஓடிக்கொண்டிருந்த அவரது இரதம், உடனே பூமியைத் தொட்டுவிட்டது; இந்தப் பாபத்தினால் அவர் சுவர்க்கம் போகுங் காலத்திலும் நரகத்தைக் கொஞ்ச நாழிகை பார்த்துக் கொண்டே போகும்படி நேரிட்டது.

நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்லவேண்டாம்.
இறந்தாலும் பொய்தன்னைச் சொல்லவேண்டாம்.

—மஹாபாரதம், துரோண பர்வம்.

(முதல் பாகம்-முற்றிற்று)





PRINTED AT THE INDIA PRINTING WORKS, MADRAS.—(2581011)